# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"



இராமபிரானின் சிற்பம்,

இராமசுவாமி கோயில், கும்பகோணம்.

மாலை 10] பிலவங்க - தை - பிப்ரவரி, 1968 [மணி 5

சென்னை அரசாங்க அறநிலையப்

பாதுகாப்புத் துறை வெளியீடு.



திருவாவடுதுறை ஆதீனத்தின் சார்பில், மாயூரம் ஸ்ரீ மாயூரநாத சுவாமி கோயிலில் நடைபெற்ற திருப்பாவை-திருவெம்பாவை மாநாட்டில், அறநிலைய ஆணையர் அவர்களும், தஞ்சைத் துணை ஆணையர் அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தல். (12—1—68)

## பொருளடக்கம்



## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

ஆண்டுச் சந்தா ரூ. 10/-

தனி இதழ் விலை ரூ. ஒன்று

'திருக்கோயில்' இதழின் சந்தாதாரர்கள் ஆகச் சேர விரும்புபவர்கள் "திரு. ஆணையர் அவர்கள், அறநிலைய ஆட்சித்துறை, சென்னை-34" என்னும் முகவரிக்கு ரூபா பத்து அனுப்பி, எப்போது வேண்டுமாயினும் சந்தாதாரர்கள் ஆகச் சேர்ந்து கொள்ளலாம்.

அல்லது, அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர்களின் அலுவலகங்களிலும், மேற்படி சந்தாத் தொகையைச் செலுத்திச் சேரலாம்.

சந்தாதாரர்கள் தங்களுடைய சரியான முழு முகவரியைத் தெரிவித்துதவுதல், இதழ்கள் தவருமற் சேர்தற்கு மிகவும் இன்றியமையாதது.

—ஆசிரியர்




# திருக்கோயில்

திங்கள் வெளியீடு

மாலை 10] பிலவங்க - தை - பிப்ரவரி, 1968 [மணி 5


## மகாமக விழாவின் மாண்பு

**கும்பகோணம் :**

இறைவனின் திருவருட்பெருக்கத்திற்குப் பள்ளமடையாகச் சிறந்து திகழ்வது நம் செந்தமிழ்நாடு. தமிழ் நாட்டிற் கோயில்களாற் புகழ்பெற்று விளங்கும் தலங்கள் பல. அவற்றுள் பழமையும் பெருமையும் வாய்ந்த ஒன்ருகத் திகழ்வது கும்பகோணம். பண்டைத்தமிழ் இலக்கியங்கள் இதனைக் குடந்தை - குடமூக்கு - குடவாயில் எனவும், புகழ்ந்துரைத்துப் போற்றும்.

**வரலாறு :**

முன்பு ஓர் ஊழிக்காலத்தில், பிரளய வெள்ளப் பெருக்கினல் உலகங்கள் அழிந்தபோது, பிரமதேவர் படைப்புத் தொழிலுக்கு அடிப்படையான அமுதத்தினை, ஒரு கும்பத்தில் சேமித்து வைத்திருந்தார். அது பிரளய வெள்ளத்தில் மிதந்து, தென்திசைக்கண் உள்ள சோழவள நாட்டில், ஓரிடத்தில் வந்து தங்கியது. சிவபிரான் ஒரு வேடனின் வடிவம் கொண்டு வந்து, அவ்வமுத கும்பத்தைத் தமது அம்பினல் சிதைத்தார். அதனல், அக்கும்பம் சிதைந்து கோணம் உற்றது; அதன்கண் இருந்த அமுதம் சிதறி நாற்றிசையும் பரவியது. அவ்விடமே கும்பகோணம் எனக் காரணப்பெயர் பெற்றது.

சிதறிய அமுதம் சிவபிரான் திருவுளப்படி திரண்டு நின்ற இடமே, கும்பகோணத்தில் உள்ள மகாமகத்தீர்த்தம், பொற்ருமரைத் தீர்த்தம் என்பனவாகத் திகழ்கின்றது. தமது அம்பினற் சிதைந்த பகுதி போக எஞ்சி நின்ற கும்பத்தின் கோணத்தினை, வேடனின் வடிவில் வந்த சிவபெருமான் ஓர் இலிங்கமாகச் செய்தார். உலக மக்களுக்கு வழிபாட்டு முறையை உணர்த்துவதன்பொருட்டுத் தாமே அதனை வழிபட்டார். பின்னர் அவ்விலிங்கத்தினுள் ஒளிவடிவிற் கலந்து ஒன்றி நின்ருர். அங்ஙனம் கும்பமே இருப்பிடமாக விளங்க, அதன்கண் ஈசுவரன் ஒன்றிக் கலந்து நிற்பதனல், அத்தலத்தில் உள்ள இறைவனுக்குக் கும்பேசுவரர் எனப்பெயர் அமைந்தது.

**சிறப்பு :**

இத்தகைய சிறப்பு மிக்க கும்பகோணத்தைச்சுற்றிப் பலதிசைகளிலும், புகழ்மிக்க பற்பல சைவத்தலங்களும் வைணவத்தலங்களும் அமைந்திருக்கின்றன. மற்றும், கும்பகோண நகரத்திலேயே மிகப் பல சிறந்த பழம்பெருங் கோயில்கள் அழகுற அமைந்து விளங்குகின்றன. பல சிறுசிறு கோயில்களோடு பெரிய சிவாலயங்கள் பத்தும், விஷ்ணு ஆலயங்கள் நான்கும், புனிதம் மிக்க தீர்த்தங்கள் பதினன்கும், கும்பகோணத்தில் உள்ளன. ஆழ்வார்களும், நாயன்மார்களும் அருள் நிறைந்த தம் திருப்பாடல்களில் இத்தலத்தை மிகவும்

புகழ்ந்து போற்றியுள்ளார். ஆதலின், ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கும் முன்னரே இந்தத்தலம் மிகவும் சிறப்புடையதாக மதித்துப் போற்றப் பெற்றுள்ளது.

**மகாமகம் :**

கும்பகோணத்தின் பல பெரும் சிறப்பு கட்குரிய காரணங்களுள் ஆங்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழும் மகாமக விழாவும் ஒன்ருகும். மகாமக விழா என்பது, வடநாட்டில் பிரயாகை அரித்துவாரம் நாசிக் உச்சயினி என்னும் நான்கு இடங்களில் மிகப் பழங்காலந் தொட்டே நடைபெற்று வருகின்ற கும்ப மேளா என்னும் பெருவிழாவைப் போன்று, நம் தமிழ்நாட்டில் நடைபெறும் மகாமக விழாவும் எத்துணை நெடுங்காலமாக நடைபெற்று வருகிறது என்பது அறிய இயலாததாய் உள்ளது.

முன்பு ஒரு காலத்தில் கங்கை, கோதாவரி, யமுனை, சிந்து, கன்னியாகுமரி, தாமிரபரணி, நருமதை முதலிய நதிகளும், மற்றும் உள்ள பல கோடி தீர்த்தங்களும் ஆகியவற்றின் தேவதைகள், காசி விசுவநாதப் பெருமானைத் தரிசித்து வணங்கச் சென்றன. அதுபோது அவைகள் அவர்பால், உலக மக்கள் தம்மிடம் வந்து மூழ்கி நீராடுவதன் மூலம் நீக்கிக்கொண்டு விட்டு விட்டுச் செல்லும் பாவங்களின் பெருஞ் சுமையைத் தாங்க முடியாமல், மிகவும் வருத்தமுற்றுவருதலைக்கூறி முறையிட்டுப் புலம்பின. காசி விசுவநாதர் அத்தேவதைகளுக்குத் தலயாத்திரை செய்தல், தீர்த்தம் ஆடுதலாகிய நற்செயல்களின் பயன்களை விளக்கினர். அத்தேவதைகளைத் தென் தமிழ்நாட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தார். கும்பகோணம் மகாமகத் தீர்த்தத்தில், மகாமகப் புண்ணிய காலத்தில் மூழ்கி நீராடும்படியும், கும்பேசுவரரை வழிபடும்படியும், அத்தேவதைகளைச் செய்வித்தார்.

சிம்மராசியில் வியாழன் என்னும் குரு பகவான் எழுந்தருளும் மாசிமகம் தான், மகாமகம் எனப்படும். ஒரு வியாழவட்டம் என்பது 12 ஆண்டுகள் கொண்டது என்பது, வான நூலார் அறிந்து உடன்படும் செய்தி. ஆதலின் மகாமகம் என்பது 12 ஆண்டுகட்கு ஒரு முறையே மட்டும் வருகின்ற ஒரு பெருஞ்சிறப்பு நிகழ்ச்சியாகும். அந்த மகாமகப் புண்ணிய நாளில், மகாமகத் தீர்த்தத்தில் நீராடிக் கும்பேசுவரர் முதலிய கடவுளரை வழிபட்டதனல் அந்நதிகளும் தீர்த்தங்களும் தத்தம் பாவங்கள் கழிந்து, புனிதம் அடைந்து சிறப்புப்பெற்றன. ஆதலின் நாமும் மகாமகப் புண்ணிய காலத்தில், மகாமகத் தீர்த்தத்தில் நீராடி இறைவனை வழிபட்டால், நம்முடைய பாவங்கள் நீங்கி, நாம் நலம் பெறலாம் என்பது திண்ணம்.

**சேக்கிழார் :**

இற்றைக்குச் சற்றேறக்குறைய 800 ஆண்டுகட்கு முன்னர் விளங்கியிருந்த சேக்கிழார் பெருமான், தமது பெரிய புராணத்தில் மகாமக விழாவைப்பற்றிக் குறிப்பிட்டிருப்பது, நாம் அறிந்து மகிழ்தற்குரியது. "கங்கை, யமுனை, கோதாவரி முதலிய நதிதேவதைகள் எல்லாம், விண்ணுலகில் இருந்து மண்ணுலகிற்கு வந்து, மகாமகப் புண்ணிய காலத்தில் கும்பகோணத்தில் உள்ள மகாமகத் தீர்த்தத்தில் நீராடியும், அங்குக் கோயில் கொண்டுள்ள கும்பேசர், நாகேசர், காரோணேசர் முதலியோரை வழிபட்டும், தத்தம் பாவங்கள் நீங்கிப் புனிதம் அடைந்து சிறப்புறுகின்றன" எனச் சேக்கிழார் பாடுகின்ருர்.

> "பூமருவும் கங்கைமுதற் புனிதமாம் பெருந்தீர்த்தம்
> மாமகந்தான் ஆடுதற்கு வந்து வழிபடும் கோயில்"

எனவரும் பெரிய புராணப்பாடல், இற்றைக்கு 800 ஆண்டுகட்கு முன்பே இச் செய்தியினை, அழகுற இனிது குறிப்பிட்டிருத்தல், ஆராய்ச்சியாளர்கள் அறிந்து போற்றற் பாலது.

**திருநாவுக்கரசர் :**

"நாற்றிசையோர் பரவும் திருக்குடமூக்கு" எனச் சேக்கிழார் அருளிச் செய்திருத்தலால், அவர் தம் காலத்திற்கும் முன்பே கும்பகோணத்தில் நிகழும் மகாமக

விழாவின்சிறப்பு, உலகெங்கும் நாற்றிசை களிலும் பரவியிருந்தமை புலனுகும்.

"தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரச்சுவதி பொற்றுமரை புட்கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தம் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னுரே"

எனத் திருநாவுக்கரசரும், தமது திருத் தாண்டகத்தில் 1300 ஆண்டுகட்கு முன்னரே குடந்தையம்பதி ஆகிய கும்ப கோணத்தில் உள்ள மகாமகத் தீர்த்தத் தில், நதிகள் பலவும் வந்து சூழ்ந்து நீராடி இறைவனை வழிபட்டு உய்யும் செய்தியைத் திருவாய் மலர்ந்தருளியுள்ளார். இவற்றுல் கும்பகோணம் மகாமக விழாவின் மாண்பு எத்தகையதென்று, நாம் இனிதுணரலாம்.

**முடிவுரை :**

பழம்பெரும் நதிகளிலும் தீர்த்தங் களிலும் சென்று நீராடுவது மிகவும் நலம் பயக்கும் செயலாகும். அதுதானும், மிகச் சிறந்த புண்ணிய காலங்களிலும் நேரங் களிலும் சென்று நீராடுவது என்பது, மிக்க நலம் பயக்கும் என்று சொல்லவும் வேண்டுமோ? ஐரோப்பாக் கண்டத்தில், பிரான்சு நாட்டில் உள்ள லூர்து **(Lourdes)** முதலிய இடங்களிற்சென்று நீராடி வழிபடுவதால், சிறந்த பல நலன்கள் விளையும் என்று, பிற சமயத்தார்களும் நம்பி ஒழுகி வருதல் காண்கின்றும். ஆதலின் நாம் கும்பகோணத்தில் நிகழும் மகாமக விழாவின் மாண்புணர்ந்து, மகா மகத் தீர்த்தத்தில் அப்புனிதப் பெரு நாளில் நீராடி, இறைவனை வழிபட்டு உய்ய முயலுவோமாக.

"மூர்த்தி தலம் தீர்த்தம்
முறையாய்த் தொடங்கினர்க்கு ஓர்
வார்த்தைசொலச் சற்குருவும்
வாய்க்கும் பராபரமே"

—ஆசிரியர்.



மகாமகக் குளம், கும்பகோணம்

# ஸ்ரீ ஆளவந்தார்

இவர் ஸ்ரீமத் நாதமுனிகளின் பௌத்திரர். ஈசுவரபட்டாழ்வாரின் புத்திரர். ஆடிமாதத்து உத்திராட நட்சத்திரத்தில் தோன்றியருளியவர். ஸ்ரீமந் நாதமுனிகளின் நியமப்படி, உய்யக்கொண்டார் பணித்த வண்ணம், மணக்கால் நம்பிகளால், இவருக்கு **யமுனைத் துறைவர்** என்று பெயரிடப்பெற்றது.

இவர் இளமையிலேயே எல்லாக்கலைகளையும், **மகா பாஷ்ய பட்டர்** என்னும் ஆசிரியர்பால் கற்றுத் தேர்ந்தவர். இவர் கலை பயின்று வருங்காலத்தில் சோழ மன்னனது அவைக்களத்தில் **ஆக்கியாழ்வான்** என்னும் புலவன் ஒருவன் இருந்து வந்தான். அவன் நாட்டில் உள்ள புலவர்களை எல்லாம் வாதப்போரில் வென்று, அவர்கள் அனைவரும் தனக்குக் கப்பம் கட்டிவரும்படி செய்து வந்தான்.

ஒரு நாள் யமுனைத்துறைவரின் ஆசிரியரான மகாபாஷ்யபட்டரிடத்தில் கப்பம் வாங்குவதற்கு, ஆக்கியாழ்வான் தன் சேவகன் ஒருவனை அனுப்பியிருந்தான். அதனால், மகாபாஷ்ய பட்டர் அவனுக்குக் கப்பம் செலுத்தக் காசு இல்லாமல், மனம் வருந்தி இருந்தார். இச்செய்தியை அறிந்த யமுனைத்துறைவர் வெகுண்டு, அச்சேவகன் கொண்டு வந்திருந்த ஓலையை வாங்கிக் கிழித்தெறிந்தார். சேவகன் திரும்பிச் சென்று நடந்த செய்தியை, ஆக்கியாழ்வானுக்கு அறிவித்தான். அதற்கு அவன், "அந்த மாணவன் வெறும் கவியா? கலைநூல்களில் வல்லவனா?". என்று தெரிந்து கொண்டுவா என்று சொல்லி, அச் சேவகனைத் திருப்பியனுப்பினான்.

அவ்வாறே சேவகன் வந்து உசாவி அறிய முற்பட, யமுனைத்துறைவர் "நாம் வெறுங்கவியும் அல்லோம். வெறும் கலை நூற்புலவரும் அல்லோம். மறுதலைக் கொள்கையினர் ஆகிய மதயானைகளின் செருக்கை அடக்கவல்ல சிங்கம் ஆவோம்" என்னும் கருத்தமைந்த சுலோகம் ஒன்றை எழுதியனுப்பினர்.

அதனைப் படித்துப் பார்த்த ஆக்கியாழ்வான், அடங்காச் சீற்றமும் வியப்பும் கொண்டான். யமுனைத் துறைவரை வாதப்போருக்கு வருமாறு செய்யும்படி, அரசனிடம் கூறினன். அரசன் ஒரு பல்லக்கை அனுப்பி, யமுனைத்துறைவரைத் தன் அவைக்களத்துக்கு அழைத்து வரும்படி செய்தான். யமுனைத் துறைவர் அரசனின் அவையை அடைந்து "இமயம் முதல் குமரி வரை உள்ள நாற்றிசைகளிலும், இருவகை மீமாம்சை நூல்களிலும் மிகவும் தேர்ச்சிபெற்ற, எம்மைப்போன்ற வேறொரு புலவனைத் தேடிப்பிடியுங்கள்! பார்ப்போம்" என்னும் கருத்தமைந்த சுலோகத்தை எழுதியனுப்பினர். எரியும் நெருப்பில் எண்ணெய்பெய்தாற்போல, இஃது ஆக்கியாழ்வானின் சீற்றத்தினை மேலும் மிகுதிப் படுத்தியது.

அரசனின் முன்னிலையில், நல்ல பெரும் புலவர்கள் பலர் நடுவணர்களாக விளங்க, ஆக்கியாழ்வானுக்கும் யமுனைத்துறைவருக்கும், வாதப்போர் நிகழ ஏற்பாடுகள் நடைபெற்றன. யமுனைத்துறைவர் மிக இளம்பருவத்தினராக இருந்தமையால், 'ஆக்கியாழ்வானை இவர் வெல்ல இயலுமோ? எனப்பலரும் ஐயுற்றுக் கலங்கி

நின்றனர்; என்ன நிகழ்கின்றது என்று பொறுத்திருந்து பார்ப்போம் என, ஆவலுடன் பலர் காத்திருந்தனர். அரசன் தன் அவைக்களப் பெரும் புலவனுகிய ஆக்கியாழ்வான் தான் வெற்றிபெற இயலும் எனத் துணிந்து கூறினன். அரசியோ 'சிறிய பெருந்தகையார்' ஆகிய யமுனைத்துறைவரின் திருமுகத்தில் வீசும் ஞானப்பேரொளியின் சிறப்பினைக் கண்டு, இக்குழந்தையே வெற்றிபெறுதல் திண்ணம் என வலியுறுத்திக் கூறினன். அரசன் அதுகேட்டு, வெற்றியுறுவோர் எவராயினும், அவர்க்குத் தன் நாட்டிற்பாதிப் பகுதியினைத் தந்து விடுவதாக வாக்கு அளித்தான்.

விவாதப்போர் தொடங்கியது. ஆக்கியாழ்வான் யமுனைத்துறைவரை நோக்கி "தொடக்கத்திலேயே நாம் பெருநூல்களுள் புகுந்து விவாதித்தல் வேண்டா. சிறிய உலகியற் செய்திகளில் இருந்தே முதலில் வாதம்புரிவோம். நீர் அன்று என்பதை ஆம் எனவும், ஆம் என்பதை அன்று எனவும் கூறி, யான் மறுப்பேன். தோற்பவர் தலையில் வெல்லுபவர் குட்டக் கடவர். நீர் ஏதேனும் கூறுக. யான் மறுக்கின்றேன்" என்ருன்.

அது கேட்ட யமுனைத்துறைவர், முகம் மலர்ந்து புன் முறுவல் பூத்து நன்று என உடன்பட்டு, பின்வரும் மூன்று சொற்றொடர்களைக் கூறினர்:—

1. உன் தாய் மலடி அல்லள்.
2. இவ்வரசன் நிலவுலகம் முழுவதையும் ஆள்பவன்.
3. இவ்வரசி கற்புடையவள்.

இம்மூன்று வாக்கியங்களையும், விவாத நிபந்தனைகளின்படி, ஆக்கியாழ்வான் உண்மை அன்று என மறுத்தல் வேண்டும். மறுப்பதாயின் முறையே, என் தாய் மலடி என்றும்; இவ்வரசன் நிலவுலகம் முழுவதையும் ஆளுபவன் அல்லன், ஒரு சிறு குறுநில மன்னனே என்றும்; இவ்வரசி கற்புடையவளல்லள் என்றும் கூறுதல் வேண்டும். கூறினல், ஒவ்வொன்றும் பெருந்தீங்காய் முடியும். ஆதலின் ஒன்றற்கும் மறுப்புச் சொல்ல வழியின்றி, ஆக்கியாழ்வான் வெட்கித் தலை குனிந்து நின்ருன். எடுத்த எடுப்பிலேயே திடுக்கிடத்தக்க பெருந் தோல்வி, எதிர்பாரா நிலையில் நேர்ந்தமை கண்டு, அவன் நெஞ்சம் துணுக்குற்ருன். அவையினரும் அதிசயம் அடைந்தனர்.

பின்னர் நிகழ்ந்த பெருநூற்பொருள்கள் பற்றிய விவாதங்களிலும், அவனுக்குத் தோல்வியே வாய்ப்பதாயிற்று. 'தோற்றவர் தலையில் வென்றவர் குட்டக்கடவர்' என்பது நிபந்தனை. ஆனல் பேரிரக்கம் மிக்க திருவுள்ளத்தினராகிய யமுனைத் துறைவர், அவனை அங்ஙனம் செய்திலர். "வயதில் மூத்து, அரசகுருவாகவும் உள்ள நும்மை யாம் அது செய்ய விரும்புகின்றிலோம்" என அவர் அருளிச் செய்தார்.

அரசனும் அரசியும், அவைக்களத்திலிருந்தோரும், யமுனைத்துறைவரின் பெரும்புலமை நலனையும், பேரருட்பெற்றிமையினையும் வியந்து வியந்து விம்மிதமுற்றுக்களித்தனர். அரசியார் 'என்னை ஆளவந்தீரோ' எனக்கூறி யமுனைத்துறைவராகிய இளம் பிள்ளையைப் பேரன்புடன் எடுத்து அணைத்து மகிழ்ச்சி கூர்ந்தார். ஆதலின், அன்று முதல் யமுனைத் துறைவர்க்கு ஆளவந்தார் என்னும் சிறப்புப் பெயரே வழங்குவதாயிற்று. அரசனும் தான் வாக்களித்தபடி, அவருக்குத் தன் நாட்டிற் பாதியளித்துச் சிறப்புச் செய்தார்.

அச் செய்திகளை யெல்லாம் கேட்டறிந்த மணக்கால் நம்பிகள், மனம் மிக மகிழ்ந்தார். ஸ்ரீ நாத முனிகள் கட்டளையாகத் தமது குருநாதர் ஆகிய உய்யக்கொண்டார் பணித்தருளியபடி, வைஷ்ணவ சமய ரகஸ்யார்த்தங்களையெல்லாம், ஆளவந்தார்க்கு உபதேசிக்க வேண்டுமே என்று கருதி, அதற்குரிய காலம் பார்த்திருந்தார்.

அரசப் பெருஞ்செல்வ நிலையில், ஆளவந்தார் வைகியிருப்பப் பெற்றமையால், அதற்கு ஏற்றபடி கட்டுங்காவலுமாக இருந்த அவரை எளிதில் அணுக முடியாமல், சிலகாலம் மணக்கால்நம்பிகள் மனம் வருந்தி யிருந்தார். 'ஆளவந்தார்

விரும்பி அமுது செய்யும் கறியமுது 'தூதுளைக்கீரை' என்று அறிந்து, ஆறு மாத காலம் நாடோறும் அதனை அவர்க்கு முறையே தவறாமல் சேர்ப்பித்து வந்தார். அதன்மூலம் ஒருநாள் ஆளவந்தாரை நேரிற் கண்டு பேசும் வாய்ப்பு அவர்க்குக் கிடைத்தது. அப்போது ஆளவந்தார் "தாங்கள் விரும்புவதைக் தெரிவித்தால் எம்மால் இயலும் அளவிற்கு அதனைத் தருகின்றோம்" என மனமகிழ்ந்து கூறினார்.

அது கேட்ட மணக்கால் நம்பிகள், "நமக்கு ஒன்றும் வேண்டா, நாம் உமக்குக் கொடுக்க வந்தோமே யன்றி உம்மிடத்து ஏதும் கொள்ள வந்தோம் இல்லை. உமது முன்னோர்கள் தேடிவைத்துச் சென்ற பெருஞ்செல்வத்திரள் உள்ளது. அந்தச் செல்வத்திரள் உள்ள இடமும் யான் அறிவேன். அதனை நீர் கண்டுணர்ந்து கைக்கொண்டருள வேண்டும்" எனப் பல பல பரிந்துரைத்தார்.

அன்று முதல் ஆளவந்தார் மணக்கால் நம்பிகள் பக்கல், ஸ்ரீ பகவத் கீதையின் பதினெட்டு அத்தியாயப் பொருளும், முறையே கேட்டுணர்ந்து தெளிந்தார். சரணாகதி நெறியின் பெருஞ்சிறப்பைச் சாலப் பெரிதும் உணர்ந்தார். இறைவனின் திருவடியில் அநுராகமும், உலகியல் வாழ்க்கையில் விராகமும் நாளும் முதிரப் பெற்றார். அப் பரிபக்குவ நிலையைக் கண்டு திருவுள்ளம் உவந்த நம்பிகள், இதுவே தக்க தருணம் என்று உட்கொண்டு, ஆளவந்தாரைத் திருவரங்கம் பெரிய கோயில் ஏற அழைத்துக் கொண்டு சென்று, "உமது முன்னோர்கள் தேடி வைத்த பெருஞ் செல்வத் திரள் இது காணும்" என்று பெரிய பெருமாளைக் காட்டி, ஆளவந்தார் அவரைப் பணிந்து வணங்கி மகிழும்படி செய்வித்தார்.

"அண்டர்கோன் அணியரங்கன்
  என் அமுதினைக்
கண்ட கண்கள் மற்றொன் றினைக்
  காணாவே"

என்றபடி ஆளவந்தார், அரங்கத்தம்மானை அநுபவித்தார். "பழுதே பலபகலும் போயினவே" என்று இழந்த நாட்களுக்காகக் கழிவிரக்கம் கொண்டார். அரங்கநாதனுக்கு ஆட்செய்வதற்காகத் துறவு நெறி பூண்டு, தென்திருவரங்கமே பதியாக வாழ்ந்துவரத் தலைப்பட்டார்.

ஒருசமயம், திருவரங்கத்தில் நம்பெருமாள் திருவத்யயனத் திருநாளில், ஆளவந்தார் எழுந்தருளியிருந்தார். அப்போது நிகழ்ந்த அரையர் சேவையின்போது, "கெடும் இடர் ஆய எல்லாம்" எனத் தொடங்கும் திருவாய் மொழியில்,

"கடுவினை களைய லாகும்
  காமனைப் பயந்த காளை
இடவகை கொண்ட தென்பர்
  எழில் அணி அனந்தபுரம்
படமுடை அரவில் பள்ளி
  பயின்றவன் பாதம் காண
நடமினோ நமர்கள் உள்ளீர்
  நாம் உமக்கு அறியச் சொன்னோம்"

என்னும் பாசுரத்தினை அரையர் பல் காலும் ஊன்றி யுறுத்திப் பாடி அபிநயித்தார். அதனால் ஆளவந்தாருக்கு, "ஆழ்வாருடைய தமர்களின் திரளில் நாம் சென்று கலந்து ஈடுபடவேண்டுமாயின், திருவனந்தபுரம் சென்று சேவித்து வருதல் இன்றியமையாததாகும்" என்னும் உணர்வும் ஊக்கமும் உதித்தன. அப்போதே அவர் கோஷ்டியில் இருந்து புறப்பட்டார்; பெரிய பெருமாள் பக்கலில் விடைபெற்றுக் கொண்டு, திருவனந்தபுரம் சென்று ஸ்ரீ அநந்த பத்ம நாபரைத் தரிசித்து, சில காலம் அங்குத் தங்கி இருந்து மகிழ்ந்தார். பின்னர் சில காலம் கழித்து ஸ்ரீ ஆளவந்தார் திருவரங்கத்திற்கு மீண்டார். நம்பெருமாள் சந்நிதியில் திருவாய்மொழி விரிவுரைகள் நிகழ்த்தி வந்தார். ஒரு நாள் "ஒன்றுந் தேவு" என்னும் பதிகத்தில்,

இலிங்கத் திட்ட புராணத்
  தீரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாது செய் வீர்களும்
  மற்றுநுற் தெய்வமு மாகிநின்றான்
மலிந்து செந்நெல் கவரி
  வீசும் திருக்குருகூர் அதனுள்,
பொலிந்து நின்ற பிரான் கண்டீர்
  ஒன்றும் பொய்யில்லை போற்றுமினே.

எனவரும் பாசுரத்திற்குப் பொருள் விளக்குங்கால், 'நமக்குப்பின்பு இத்தர்சனம் நிர்வகிப்பார் ஒருவரையும் காணப் பெற்றிலோமே' என்று கவலையுறலானார்.

அப்போது காஞ்சிபுரத்தில் இருந்து யாத்திரையாகத் திருவரங்கத்திற்கு வந்த வைஷ்ணவர்கள் இருவர் வாயிலாக, இளையாழ்வார் என்னும் இராமானுஜர் திருக்கச்சி நம்பியின் பக்கலில் ஈடுபாடுடையவராய்த் தேவப் பெருமாளுடைய திருத்தொண்டில் ஊற்றம் கொண்டிருத்தலை உணர்ந்து மகிழ்ந்தார். அவரே தமக்குப் பின்னர் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தை நிர்வகித்துப் பாதுகாத்துப் பரப்ப வல்லவர் என்று தேர்ந்து தெளிந்தார். தமது அணுக்க மாணவராகிய பெரிய நம்பியை அழைத்து 'நீர் சென்று காஞ்சிபுரத்தில் இருந்து இளையாழ்வாரை எவ்வாருயினும் இங்கு அழைத்து வருக' என அனுப்பிவைத்தார். அதன்படியே அவர் காஞ்சிபுரம் சென்று இராமானுஜரை அழைத்துவருவதற்குள், ஆளவந்தார் திருமேனிக்குத் தளர்ச்சி ஏற்பட்டு, 'நலம் அந்தம் இல்லதோர் நாடு' எனப்படும் பரமபதம் அடையப் பெற்ருர்.

அதுகண்டு திருவரங்கப் பெருமாள் அரையர் முதலிய அனைவரும் வேரற்ற மரம்போல விழுந்து துடிதுடித்தனர். பின்னர் ஒருவாறு தேறி, அவர்தம் புதல்வரான **பிள்ளைக்கரசு நம்பியைக்** கொண்டு மேற்செய்யத் தகுந்த சடங்குகளை எல்லாம் நடத்தி, திருக்கரம்பன் துறையிலே திருப்பள்ளி படுத்துவதற்காக, அவர்தம் திருவுடலை அலங்கரித்து ஒரு தேர் மீது எழுந்தருளச் செய்து நடத்திச் சென்றனர். அப்போதுதான் பெரிய நம்பியும், இளையாழ்வாரும் அங்கு வந்து சேர்ந்தனர். நடந்தது அறிந்து அலறித்துடித்து வருந்தி நின்றனர்.

ஆளவந்தாரின் திருமேனியையேனும் தரிசிக்கப் பெற்ருேமே என்று, இளையாழ்வார் ஒருவாறு மனம்தேறி, அவர்தம் திருமேனியை அடிமுதல் முடிகாறும் நோக்கி வருகையில், ஆளவந்தாரின் திருக்கையில் மூன்று திருவிரல்கள் முடங்கி இருக்கக் கண்டார். 'முன்னும் இப்படி உண்டோ? இப்போது தானே?' என்று அருகுநின்ற முதலிகளை வினவினர். அவர்கள் முன்பு இருந்ததில்லை; இப்போது மட்டுமே காண்பது' எனத் தெரிவித்தனர். அதுகேட்ட இளையாழ்வார் "இவர்தம் திருவுள்ளத்திலே ஏதேனும் குறைகள் நிறைவேருமல் இருந்திருத்தல் வேண்டும். இவருடைய திருவுள்ளத்து உணர்ச்சிகளை, உம்மில் யாரேனும் அறிந்துள்ளீரோ" என வினவினர்.

அப்போது அங்கு இருந்த முதலிகள், (1) பிரம்மசூத்திரத்திற்கு விசிஷ்டாத்துவைத மத சித்தாந்தத்தை விளக்கும் முறையில் ஒரு பாஷ்யம் இயற்றுதல் வேண்டும்; (2) நம்மாழ்வாருடைய திருவாய்மொழிக்கு விரிவான வியாக்கியானம் ஒன்று தோன்றுதல் வேண்டும்; (3) வியாச பராசர முனிவர்கள் இடத்தில் நன்றி உணர்வு பெருகி நெடுகச் செல்லும்படியான செயல் ஏதேனும் நடைபெறுதல் வேண்டும் என்ற மூன்று விருப்பங்களை, ஆளவந்தார் அவ்வப்போது வெளியிடுவது உண்டு எனத் தெரிவித்தனர்.

அதுகேட்ட இளையாழ்வார் தண்டனிட்டுக் கைகூப்பி நின்று, "இவ்வுடல் திண்ணிதாய் அமைந்து, குருவருளும் அடியேன்பால் முழுநிறைவாய்ப் பொருந்தி இறைவனும் துணை புரிவாருயின், அடியேன் இம்மூன்றையும் நிறைவேற்றக் கடவேன்" என யாவரும் அறியக் கூறி உறுதி பூண்டார். அவ்வளவில் முடங்கி இருந்த ஆளவந்தாரின் திருக்கை விரல்கள் மூன்றும் நிமிர்ந்து நின்றன. அது கண்டு யாவரும் அதிசயித்து மகிழ்ந்தனர். பின்னர் அடைவே ஆளவந்தாரின் சரம கைங்கரியங்கள் அனைத்தும் குறைவற நடந்தேறின.

**"ஆளவந்தாரோடு நான் கூடியிருந்து குளிரப்பெற்றிருப்பேன் ஆயின், பரமபதத்திற்கே படிகட்டி இருப்பேனே"** என்று, இராமானுஜர் பலகாலும் பணிப்பராம். இதனுல் ஆளவந்தாரின் அருமை பெருமைகளை நாம் யாவரும் இனிதறியலாம்.

ஸ்ரீ ஆளவந்தாரின் திருவடிவாரத்தில், பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி, திருமாலையாண்டான், திருக்கச்சி நம்பி, வானமாமலை ஆண்டான், தெய்வவாரி ஆண்டான் முதலிய பெருமக்கள் பலர் ஆச்ரயித்து வாழ்ச்சியுற்ருர்கள். —ஆசிரியர்.

# ஸ்ரீமந் நாத முனிகள்

வைணவ சமயப் பெருஞ் சான்றோர்கள் ஆழ்வார்கள் என்றும், ஆசார்யர்கள் என்றும் இருவகைப் படுவர். ஆசார்யர்களின் வரிசையில் முதல்வர், **நாதமுனிகள்** என்பவரே ஆவர். இவர் சிதம்பரத்திற்கு அருகேயுள்ள **வீரநாராயணபுரம்** என்னும் காட்டுமன்னார் கோயிலில் ஆனி மாதம் அநுஷ நட்சத்திரத்தில் திருஅவதாரம் செய்தருளினார். இவர்தம் தந்தையார் ஈசுவரமுனிவர்; புதல்வர் ஈசுவரபட்டாழ்வான். ஆழ்வார் பக்கலில் எம்பெருமான் செய்திருந்த திருவருட் பெருக்கு, அவருக்குப் பிறகு ஸ்ரீமந் நாதமுனிகளின் திருமரபில் பெருகத் தொடங்கிற்று. ஆதலின், ஸ்ரீநாதமுனிகளின் குலம் "**சொட்டைக் குலம்**" என வழங்கப்படும்.

ஸ்ரீமந் நாதமுனிகள் இளமையிற் கற்பன பலவும் கற்றுத் தேர்ந்து, வீரநாராயணபுரத்தில் உள்ள **மன்னனார்** என்றும் எம்பெருமானுக்கு, எல்லா வகையான தொண்டுகளும் செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். ஒரு சமயம் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் திருநாராயணபுரம் என்னும் திவ்விய தலத்தைச் சேர்ந்த பகுதியில் இருந்து யாத்திரையாகப் புறப்பட்டு, வீரநாராயணபுரம் வந்தனர். அங்கேயுள்ள மன்னனார் சந்நிதியில் தங்களுக்குத் தெரிந்த துதிப் பாடல்களை யெல்லாம் பாடி வழிபட்டு மகிழ்ந்தனர். அப்போது, அவர்கள் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழியில்,

*ஆரா அமுதே! அடியேன் உடலம்*
*நின்பால் அன்பாயே,*
*நீராய் அலைந்து கரையவுருக்கு*
*கின்ற நெடுமாலே,*
*சீரார் செந்நெல் கவரி வீசும்*
*செழுநீர்த் திருக்குடந்தை*
*ஏரார் கோலம் திகழக் கிடந்தாய்!*
*கண்டேன் எம்மானே!*

எனத் தொடங்கும் பதிகத்தையும், செவிக்கினிய இசையுடன் பாடி மகிழ்ந்தார்கள். அப்பதிகத்தின் முடிவில்,

உழலை யென்பின் பேய்ச்சி முலையூ
டவளை யுயிருண்டான்,
கழல்கள் அவையே சரணாக்கொண்ட
குருகூர்ச் சடகோபன்,
குழலில் மலியச் சொன்ன ஓரா
யிரத்துள் இப்பத்தும்,
மழலை தீர வல்லார் காமர்
மானேய் நோக்கியர்க்கே.

எனவரும் பாடலையும், அவர்கள் இனிமையாகப் பாடினார்கள்.

அவற்றைக்கேட்டு நாதமுனிகள் மிகவும் மகிழ்ந்தார். அவர்கள் பாடியபோது "குழலில் மலியச் சொன்ன ஓர் **ஆயிரத்துள்** இப்பத்தும்" என வந்த சிறந்த வரியினால், இத்தகைய பாடல்கள் ஆயிரம் அருளிச் செய்யப் பெற்றனவாதல் வேண்டுமென்னும் குறிப்பை உணர்ந்தார்.

யாத்திரீகர்களாக வந்த அவ்வைஷ்ணவ அன்பர்களை நோக்கி "சுவாமிகாள்! உங்களுக்கு இதுபோல் ஆயிரம் பாசுரமும் பாடமாக வருமோ"? என வினவினார். அதற்கு அவர்கள் "இப்பத்துப் பாசுரம் தவிர வேறொரு பாசுரமும் யாம் அறியோம்" என்றார்கள். அதன்பின் நாதமுனிகள் அவர்களை நோக்கி, "உங்கள் நாட்டில் இந்த நூலேனும் உண்டோ? பாசுரம்

ஆயிரமும் பயின்று வல்லார் எவரேனும் உளரோ"? என வினவினர். அவர்கள், நூல்களையோ நூல்பயின்றோரையோ பற்றித் தமக்கு ஏதும் தெரியாதென்று கூறி, விடை பெற்றுச் சென்றனர்.

அது முதல், நாதமுனிகளுக்கு இரவும் பகலும் இதுவே சிந்தை ஆயிற்று. ஆழ்வார் அருளிச் செய்த ஒரு பதிகப் பாசுரமே இத்தகைய சிறப்புடையதாய்ச் சிந்தையினை மகிழ்விக்கச் செய்ய வல்ல தாயின், அவை ஆயிரம் பாசுரங்களும் கிடைத்தால் எப்படியிருக்கும் என்று எண்ணியெண்ணி, உள்ளம் வியந்தார். அவைகள் கிடைத்திலவே என்று கருதி, உள்ளம் வெதும்பி வருந்தினர். அவற்றை யெல்லாம் எப்படியும் கண்டு பிடித்து வெளிப்படுத்தி, உலகிற்பரப்ப வேண்டும் என்று மனவுறுதி பூண்டார். "குருகூர்ச் **சடகோபன்** சொன்ன ஆயிரம்" என்று தம் செவிப்பட்டபடியால், அந்தச் சடகோபர் அவதரித்தருளிய குருகூருக்குச் சென்று விசாரித்தால், அங்கே ஏதேனும் தகவல் கிடைக்குமென்று கருதினர். அதன்படியே, குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரிக்குப் புறப்பட்டுச் சென்றார். அங்கே சென்று அவர் பொலிந்துநின்ற பிரானையும், நம் மாழ்வாரையும் சேவித்தார். அப்போது அங்கு **ஸ்ரீ மதுரகவி**களின் மாணவர் வழியில் தோன்றிய **ஸ்ரீ பராங்குசதாசர்** என்பவர் நேர்பட, அவர்பால் தாம் வந்த நோக்கத்தை விண்ணப்பித்துக் கொண்டார்.

அதற்கு அவர் "திருவாய்மொழியும், மற்றும் உண்டான திவ்வியப் பிரபந்தங்களும், பிரசாரம் இன்றி அருகி மறைந்து நெடுங்காலம் ஆயிற்று. ஆயினும் எங்கள் குலக்கொழுந்தாகிய மதுரகவிகள் அருளிச் செய்த "**கண்ணிநுண் சிறுத்தாம்பு**" என்னும் பிரபந்தம் ஒன்று உள்ளது. அதனை ஆழ்வார் திருமுன்பு நியமத்துடன் பன்னீராயிரம் முறை ஓதி வழிபட்டால் ஆழ்வார் வெளிப்பட்டு உங்கள் விருப்பம் நிறைவேறுதற்கு அருள்புரிவார்." எனப் பெரியோர்கள் கூறப் பல்கால் கேட்டிருக்கின்றேன் என்றார்.

அதுகேட்ட நாதமுனிகள் திருவுள்ளம் தேறி, மகிழ்ச்சிக்கடலில் திளைத்தார். பராசங்குச தாசர்பால் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்னும் பிரபந்தத்தை விநயமுடன் வேண்டிப் பெற்றார். அவர் சொன்னபடியே அதனை ஆழ்வார் திருமுன்பு சென்று அமர்ந்து, பன்னீராயிரம் முறை நியமத்துடன் ஓதி வழிபட்டார். அதன் பயனாக, நம்மாழ்வார் அவருக்குக் காட்சி கொடுத்து, திவ்வியப் பிரபந்தங்களையும், அவற்றின் அரும்பெரும் பொருள் நுட்பங்களையும், அட்டாங்கயோக அனுபவ மறைபொருட் செய்திகளையும், உணர்த்தியருளி மறைந்தார்.

இங்ஙனம் நம்மாழ்வாரின் அருள் பெற்ற நாதமுனிகள், வீரநாராயணபுரம் திரும்பி, மன்னனார் சந்நிதியில் வணங்கி, அப்பெருமான் திருவருள் பெற்றுத் தம்முடைய மருமக்களான **கீழையகத்தாழ்வார், மேலையகத்தாழ்வார்** என்னும் இருவரையும் அழைத்து, திவ்வியப் பிரபந்தங்களை, இயலும் இசையும் ஆக்குதல் வேண்டும் என்றும், இனிய இசையில் அமைத்துப்பாடுதல் வேண்டும் என்றும் பணித்தார். அவர்களுக்கு அவற்றில் பயிற்சியும் அளித்தார். அவர்களின் வாயிலாகத் திவ்வியப்பிரபந்தங்கள் உலகில் பரவித் தழைத்து வளரும்படி ஏற்பாடுகள் பல செய்தருளினர்.

நாதமுனிகளின் நற்பெருந் தொண்டினாலேயே, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் நாடெங்கும் பரவித் தழைத்து, நலமுற வளர்வதாயிற்று. வடமொழி வேதத்திற்கு **வேதவியாசர்** போல, தமிழ் மறைகளாகிய திவ்வியப்பிரபந்தங்களுக்கு **நாதமுனிகள்** செய்தருளிய நல்ல பெருந்தொண்டு, எல்லை இல்லாததாகும்.

நாதமுனிகளின் திருவடிகளில் ஈடுபட்டு உய்ந்தவர்கள் எண்மராவர். அவர்கள் முறையே பின்வருவோர் ஆவர் :—

1. உய்யக்கொண்டார்.
2. குருகைகாவலப்பன்.
3. நம்பிகருணாகரதாசர்.
4. ஏறுதிருவுடையார்.
5. திருக்கண்ணமங்கையாண்டான்.
6. வானமாமலை தேவியாண்டான்.
7. உருப்புட்டூராச்சான்பிள்ளை.
8. சோகத்தூராழ்வான்.

இவர்கள் அனைவருக்கும் நாதமுனிகள், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் முழுமையும் நன்கினிது பயிற்றி ஓதுவித்து, வேத வேதாங்க நூல்களையும் விளக்கமுறக் கற்பித்தருளினர்.

நாதமுனிகள் இயலும் இசையும் இனிதறிந்தவர் தேவகானம் பாடுவதில் தேர்ச்சி மிக்கவர். யோக நிலையில் நெடுங்காலம் எழுந்தருளியிருந்தவர். குருகை **காவலப்பன்** என்னும் சிஷ்யருக்கு, அட்டாங்க யோக முறைகளை அருளிச் செய்தார். 'தம் திருக்குமாரராகிய ஈசுவர பட்டாழ்வான் அவர்களைப் பார்த்து, "உமக்கு ஒரு புதல்வர் தோன்றுவார். அவருக்கு **யமுனைத்துறைவர்** என்னும் திருப்பெயர் இடுக" எனப் பணித்தார். தமது மாணவராகிய உய்யக் கொண்டாரை நோக்கி, "யமுனைத்துறைவருக்கு நீர் நம்முடைய சமய தரிசன நுண்பொருள்களையெல்லாம் உணர்த்தி உபதேசித்தல் வேண்டும்" என்று நியமித்தருளினர்.

இவ்வாறு செய்யத்தகுவன பலவும் செய்து, யோக நிலையில் இருந்தபடி இராமபிரான் தரிசனம் அளித்தருளப்பெற்று, **கங்கைகொண்ட சோழபுரம்** என்னும் இடத்தில், ஒரு புனித நன்னாளில் பரமபதம் அடைந்தருளினர். குருகைகாவலப்பன் என்னும் இவர்தம் மாணவர், இவர் யோகத்தில் எழுந்தருளியிருந்த இடத்திற்கு அருகிலேயே, யோகநிலை கைகூடி வாழ்ந்திருந்தார்.

வைணவப் பெருஞ்சான்றோர் ஆகிய ஸ்ரீ நாதமுனிகள் காலத்திலேயே, சைவ சமயத் திருமுறைகளைத் தேடிக் கண்டெடுத்து அடைவுபடுத்தி வழங்கியருளிய **நம்பியாண்டார் நம்பிகள்** என்பவரும் வாழ்ந்திருந்தனர் என வரலாற்று நூலறிஞர்கள் கூறுகின்றனர்.

—ஆசிரியர்.



'வார வழிபாடு' முறையாகவும், சிறப்பாகவும், அதிகமான அன்பர்களுடனும் நடைபெற்று வந்தமைக்காக, காஞ்சி காமகோடி பீடம் **ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள்** அவர்கள் வழங்கிய பரிசினை, ஆணையர் அவர்கள் திருவெண்காடு ஸ்ரீ சுவேதவனேசுவரர் கோயிலுக்கு வழங்குதல்,

# திருப்பாவைச் செழும்பொருள்

(முற்றொடர்ச்சி)

கற்றுக் கறவைக்
கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச்
சென்று செருச்செய்யும்
குற்றமொன்(று) இல்லாத
கோவலர்தம் பொற்கொடியே!
புற்றர வல்குல்
புனமயிலே! போதராய்
சுற்றத்துத் தோழிமார்
எல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து
முகில்வண்ணன் பேர்பாடச்
சிற்றாதே பேசாதே
செல்வப்பெண் டாட்டி நீ
எற்றுக்(கு) உறங்கும்
பொருள் ஏலோர் எம்பாவாய்!

**கற்றுக்கறவை:** எல்லாம் தலைநாகுகளாய் இருக்கை, கன்று நாகுகளாய் இருக்கை. நித்யசூரிகள் பகவத் ஸ்பர்ஸத்தாலே பஞ்சவிம்ஸதி வார்ஷிகராய் இருக்குமாபோலே, இப்பசுக்களும் கிருஷ்ண ஸ்பரிசத்தாலே கீழ்நோக்கி ப்ராயம் புகுகை.

**கணங்கள் பல:** தனித்தனியே எண்ணிமுடியாமை அன்றிக்கே சமூகங்களும் எண்ணிமுடியாது. ஆத்மாக்களுக்குத் தொகையுண்டானால் இறே, பசுக்களுக்குத் தொகை உள்ளது. "எண்ணில் பல் குணங்கள்" என்று சொல்லுகிற பகவத் குணங்களுக்கு எல்லை உண்டாகிலும், இப்பசுக்களுக்கு எல்லையில்லை.

**கறந்து:** அநேக ரித்விக்குகள் செய்யக்கடவ சடங்கை அதில் கூர்மை உடையவன் ஒருவனே செய்யுமா போலேயும், பிராம்மணர் வேதம் முழுவதையும் அதிகரிக்குமா போலேயும், க்ஷத்திரியன் பருவம் நிரம்புதற்கு முன்னே யுத்தத்திலே வல்லவன் ஆமாறு போலேயும், ஈசுவரன் ஒருவனுமே சர்வாத்மாக்களினுடையவும் கர்மானு குணமாக நாமரூபங்களைப் பண்ணி நியமனாதிகளைப் பண்ணுமாறு போலேயும், பசுக்கள் அநேகமாயினும் சாதியில் மெய்ப்பாட்டாலும் விருத்தியாகையாலும் ஒருத்தனுமே அடங்கக் கறக்கவல்ல சாமர்த்தியம். பாலும் நெய்யும் கொண்டு வினியோகம் இல்லாதபடி ஸம்ருத்தம் ஆகையாலே, முலைக்கடுப்புக்கெட கறந்து என்றுமாம்.

**செற்றார்:** பகவத் ஸம்ருத்தி பொறுதார் பாகவதர்களுக்கு சத்ருக்கள்; பாகவத ஸம்ருத்தி பொறுதவர்கள் எம்பெருமானுக்குச் சத்ருக்கள். இராவண ஸகாசத்தினின்றும் வந்தான் என்றதே நம் எதிரியான பையல் (இராவணனின) ஓலக்கத்தினின்றும் வந்தான் என்று அங்கதப் பெருமாள் பேசினாற்போலே, ஆண்டாளும் இவ்வூரில் ஸம்ருத்தி பொறுதவர்களைச் சத்ருக்கள் என்கிறாள்.

**திறல் அழிய:** பஸ்மதாரியான ருத்ரன், பிராம்மணரைப் போலவே வேதம் சொல்லித் திரியும் பிரம்மன், அப்ஸரஸ்ஸுகளை மெய்க்காட்டுக் கொள்ளும் இந்திரன், அந்நிய பரனாய்க் கிடந்து உறங்கும் ஈஸ்வரன், இவர்கள் அடங்கலும நமக்கு எதிரோ என்றிருக்கும் கம்ஸனின் மிடுக்கு அழியும்படி.

**சென்று செருச் செய்யும்:** எதிரிகள் வந்தால் பொருகை அன்றிக்கே, இருந்த இடங்களிலே சென்று பொருகை. சக்ரவர்த்தித் திருமகனைப்போலே இவர்கள் வீரம். எதிரிகள் வந்து அடைமதிள் படுத்த வெல்லுகை குற்றமானாற்போலே, நாங்கள்

வரப் புறப்படாதே இருக்கை உனக்குக் குற்றமன்றோ? இராஜாக்கள் எதிரிகளைத் தோற்கும்படி பொருவார்களாயினும், அந்தப்புரத்தில் வந்தால் எளியராய் அன்றோ இருப்பது!

குற்றம் ஒன்றில்லாத கோவலர்: எடுத்து வரப்பார்த்திருக்கும் குறையில்லை; எதிரிகள் கையில் ஆயுதத்தைப் போகடக் கொன்றார்கள் என்னும் குறையில்லை; அழியச் செய்யா நின்றார்கள் என்று கிருஷ்ணனிடம் முறையிடடால் 'செய்தாரேல் நன்று செய்தார் என்னும்படிப் பிறந்தவர்கள்.

பொற்கொடியே: 'ஜனக வம்ஸத்திற்கே கீர்த்தியை உண்டாக்கப் போகிறவள்' என்றாற் போல, ஊருக்காக ஒரு பெண்பிள்ளை. தர்ஸநீயமாய் இருக்கையும், கண்ணனாகிற கொழு கொம்பை ஒழிய உயிர்வாழாமையும் உடையவள்.

புற்றரவு அல்குல்: புறம்பே புறப்பட்டுப் புழுதபுடைத்த உடம்பன்றிக்கே, தன் நிலத்திலே வர்த்திக்கிற ஸர்ப்பத்தினுடைய பணமும கழுத்தும் போலே ஓசிவையும் ஒளியையும் அகலத்தையும் உடைய நிதம்பப் பிரதேசத்தை உடையவளே. இராமபிரான் ஆண்களையும் பெண்ணுடை உடுக்கபபண்ணுமா போலே, பெண்களை ஆண்கள் ஆக்குகிறது இவளுடைய அல்குல்.

புனமயிலே: தன் நிலமாகிய சோலையிலே நின்ற மயிலினுடைய தோகை போலே இருக்கிற அளகபாரத்தை உடையவளே. 'பொற்கொடியே' என்கையாலே சமுதாய சோபையைச் சொல்லிற்று. 'புற்றரவு அல்குல்' என்று அவயவ சோபையைச் சொல்லிற்று.

போதராய்: நாங்கள் உன்னை முன்னே செல்லவிட்டு, உன் அழகைக் கண்டு களிக்கும்படி நீ வெளியே வருக; எங்களை நீ அவனோடு கூட்ட வேண்டா, எங்களுக்குத்தாரகமாகநாலடி நடந்துகாட்டாய்.

சுற்றத்துத் தோழிமார்: இவ்வூர் அடங்கலும் இவளுக்குத் தோழிமார்; இவ்வூர் அடங்கலும் இவளுக்கு உறவு. எல்லாரும் வந்து, உன்னை ஒழிய ஒரு பேறு உண்டு என்றுஇருக்கினன்றோ இவர்களுக்குக்கண் உறங்குவது.

நின் முற்றம்: பரமபதத்திலும் இடமுடைத்தாய் இருக்கை.

புகுந்து: ப்ராப்பிய ஸ்தலத்தே புகுந்து. ஸேஷிக்குப் ப்ராப்பியமானது ஸேஷபூதனுக்குப் ப்ராப்பியமாகக் கேட்க வேணுமோ?

முகில் வண்ணன் பேர்பாட: நீ உகக்கும் அவன் அழகிலும் ஔதாரியத்திலும் ஈடுபட்டு அவன் திருநாமத்தைப் பாடச் செய்தேயும்.

சிற்றாதே: துயில் உணர்ந்து விழித்தமைக்கு அடையாளமாக உடலசைவுகளைச் செய்யாமலும்.

பேசாதே: ஏதேனும் ஒரு வார்த்தையைச் சொல்லாமலும்.

செல்வப்பெண்டாட்டி: உன்னோடு கூடுவது எங்களுக்கெல்லாம் ஐசுவரியமுமான நீ; கிருஷ்ண குணாநுஸந்தானத்தாலே புஷ்கலையான நீ என்னவுமாம்.

எற்றுக்கு உறங்கும் பொருள்: எங்கள் பாடே புறப்படாமல் உறங்குவதற்கு ஒரு பயன் உண்டோ? 'அடியார் குழாங்களை உடன் கூடுவது என்று கொலோ?' என்றபடி திரளாகச் சேர்ந்து அனுபவித்தலைவிட்டு, கைவல்ய மோட்சம் போலே அவனைத் தனியே அனுபவிக்கும் காரியம் என்ன? (11)

கனைத்(து) இளங் கற்றெருமை
கன்றுக்(கு) இரங்கி
நினைத்து முலைவழியே
நின்றுபால் சோர
நனைத்(து) இல்லம் சே(று) ஆக்கும்
நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழநின்
வாசற்கடை பற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக்
கோமானைச் செற்ற
மனத்துக்(கு) இனியானைப்
பாடவும்நீ வாய்திறவாய்!
இனித்தான் எழுந்திராய்,
ஈதென்ன பேருறக்கம்?
அனைத்(து) இல்லத் தாரும்
அறிந்(து) ஏலோ ரெம்பாவாய்!



ஸ்ரீ ஆராவமுதப் பெருமாள்,
திருக்குடந்தை.

அன்பளிப்பு :
திரு. N. கிருஷ்ணசாமி
சென்னை-17.

**கனைத்து:** உதாரர் கொடுக்கப் பெரு விட்டால் படுமாபோலேயும், ஆச்ரித கார்யம் செய்யப் பெருவிட்டால் ஈச்வரன் தரிக்க மாட்டாமை போலேயும், ப்ராப்த காலத்தில் கறப்பார் இல்லாமையாலே முலை கடுத்துக் கதறுகை.

**இளங்கற்றெருமை:** இளங் கற்ருன எருமை என்னுதல்; இளங்கன்றை உடைய எருமை என்னுதல். இரண்டாலும் பாடு ஆற்ற மாட்டாமை சொன்னபடி. ஸேஷனும் ஸேஷியும் ஒருவரை ஒருவர் பிரிந்து தரிக்க மாட்டாமை போலே.

**கன்றுக்கு இரங்கி:** தன் முலைக்கடுப்புக் கிடக்க, கனறு என்படுகிறதோ என்று இரக்கம் கொண்டு. எம்பெருமான் ஆச்ரித விஷயத்தில் இரங்கும்படிக்கு நிதர்ஸனம் இறே.

**நினைத்து முலை வழியே:** கன்றை நினைத்து பாவநாப்ரகர்ஷத்தாலே முலையிலே வாய் வைத்ததாகக் கொண்டு கை வழிதவிர பால் சொரியா நிற்கும்.

**நின்று பால் சோர:** நினைவு மாருமையாலே திருமலையில் திருஅருவிகள் போலே, பால் மாருதே சொரிகை. பகவத் விஷயம் கேளாதே இருக்க, தம் செல்லாமையாலே சொல்லுவாரைப் போலே, பால்தானே சொரியும் எனினுமாம்.

**நனைத்து இல்லம் சேருக்கும்:** பால் வெள்ளம் இடுகையாலும், எருமைகள் துகைக்கையாலும் சேருய்க் கிடக்கும். எத்தனையேனும் ஏறிப்பாயாத மேடும் பால் வெள்ளத்தாலே சேருனபடி.

**நற்செல்வன்:** தோற்றி மாயும் சம்பத் தன்றிக்கே நிலை நின்ற சம்பத்து. அதாகிறது கிருஷ்ணன் திருவடிகளிலே நிரந்தர சேவை. கைங்கரிய லக்ஷ்மியிறே இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற சம்பத்து. தன் வைஷ்ணவ ஸ்ரீயாலே உலகம் முழுவதற்கும் வைஷ்ணவத்துவம் உண்டாகும்படி இருக்கை.

**தங்காய்:** தமயனுடைய தன்மையைச் சொல்ல வேண்டாத ஏற்றம் உண்டிறே உனக்கு. ஸ்ரீவிபீஷணுழ்வானிலும் அவன் மகளான திரிசடை பிராட்டிக்கு அடிமை செய்தாற்போலே, க்ருஷ்ணனை நோக்கின தமையனைக் காட்டிலும், எங்களை நோக்க வேண்டாவோ.

**பனித்தலை வீழ நின்வாசல் கடைபற்றி:** மேல் மழை வெள்ளமிட, கீழ் பால் வெள்ளமிட, நடுவில் மால் வெள்ளமிட நின்ற நிலையாகையாலே. தெப்பம் பற்றுவாரைப் போலே நின்வாசற் கடையில் தண்டியத்தைப் பற்றிக்கிடக்கிற இந்தத் தர்ம ஹானியினை அறிகிலே.

**சினத்தினுல் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற:** பெண்களைத் தீராமாற்ருக நெஞ்சாரல்பண்ணும் கிருஷ்ணனை விட்டுப் பெண் பிறந்தார்க்குத் தஞ்சமான சக்ரவர்த்தித் திருமகனைச் சொல்லுவோம் இவள் எழுந்திருக்கைக்காக என்று இராம விருத்தாந்தத்தைச் சொல்லுகிருர்கள்.

தண்ணீர்போலே இருக்கிற சக்ரவர்த்தித் திருமகனுக்கும் சீற்றமுண்டோ என்னில் ஆச்ரித சத்ருக்கள் இவர்க்கும் சத்ருக்கள் இறே. தன் திருமேனியிலே அம்புபட்ட போது ஆறியிருந்தான், திருவடி (அனுமான்) மேலே அம்புபட்டபோது சீறினன் இறே.

ஆச்ரித காரியமென்றும், தம் காரியமென்றும் இரண்டில்லை. மகாராஜர் (சுக்ரீவன்) சீற்றம் திரண்டு வாலியைக் கொல்ல வேணும் என்ற போது அம்பு எய்தார்; அவனுக்கு ஸௌப்ராதரம் பின்னாட்டிக் கண்ண நீர் பாய்ந்தவாறே தாமும் கூட அழுதார்.

**தென் இலங்கை:** பையல் செய்த அநீதியை நினைத்து, 'குறும்பர் ஊர்' 'குறும்பர் ஊர்' என்பாரைப் போலே, அத்திக்கும் அஸஹ்யம் ஆகை.

**கோமானை:** 'அஹோவீர்யம்' என்று திருவடி (ஆஞ்சநேயர்) மதித்த ஐஸ்வர்யம் இறே.

**செற்ற:** ஓர் அம்பாலே தலையைத் தள்ளிவிடாது படையைக் கொன்று தேரை அழித்து, ஆயுதங்களை முறித்து, எதிர்த்துக் கிளர்ந்து வந்த மானத்தை

அழித்து, நெஞ்சாரல் படுத்திக் கொன்ற படி.

**மனத்துக்கு இனியானை :** பெண்களைப் படுகுலை அடிக்கும் கிருஷ்ணனைப் போலன்றிக்கே, ஏகதார விரதனுயிருக்கை. சத்ருக்களுக்கும் கூட கண்ண நீர் விழவிடு மவன். கிருஷ்ண விரகத்தாலே கமர் பிளந்த நெஞ்சு பதம் செய்யும் படிக்காக சக்ரவர்த்தித் திருமகனைப் பாடுகின்றனர். 'வேம்பேயாக வளர்த்தாள்' என்று பெற்ற தாயையும் குற்றம் சொல்லும்படியிறே கிருஷ்ணன்படி. "கௌஸல்யா லோகபர்த் தாரம்" என்று பெற்றவளையும் கொண் டாடும்படியிறே இராமன்படி.

**பாடவும் நீ வாய்திறவாய் :** நாங்கள் வாய்திறந்து பாடவும் நீ வாய்திறக்கிலை. ப்ரீதிக்குப் போக்குவிட வேண்டாவோ ?

**இனித்தான் எழுந்திராய் :** எங்கள் ஆர்த் திக்கு உணராவிட்டாலும் உன் பேற்றுக் கேனும் உணர வேண்டாவோ ? எங்கள் ஆற்றுமையை அறிந்த பின்பும் எழுந் திராது ஒழிவதே.

**ஈது என்ன பேருறக்கம் :** பரார்த்தமாக உலகமெலாம் நன்கு ஒடுங்க உறங்கும் ஈசுவரன் உறக்கமும் அன்றிக்கே தாபார்த் தராய் தமோகுண அபிபூதராய்க் கிலேசம் போக உறங்கும் சம்ஸாரிகள் படியும் அன் றிக்கே இரண்டிலும் வேறுபட்டு இஃதொரு பத்தொன்பதாம் பாஷையாய் இருந்ததீ !

**அனைத்து இல்லத்தாரும் அறிந்து :** பகவத் விஷயம் ரஹஸ்யமாக அநுப விக்கு மித்தனை. புறம்பு இதுக்கு ஆளுண்டோவென்று கிடக்கிருயாகில் அதெங்கும் ப்ரசித்தமாய்த்து என்றுமாம். எம்பெருமானார் திருவவதரித்தாற்போலே காணும் இப் பெண்பிள்ளையும். (12)

புள்ளின்வாய் கீண்டானைப்
 பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக்
 கீர்த்திமை பாடிப்போய்ப்
பிள்ளைக ளெல்லாரும்
 பாவைக் களம்புக்கார் ;
வெள்ளி யெழுந்து
 வியாழம் உறங்கிற்று ;
புள்ளும் சிலம்பினகாண் ;
 போதரிக் கண்ணினுய் !
குள்ளக் குளிரக்
 குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ ?
 பாவாய்நீ நன்னுளால் ;
கள்ளம் தவிர்ந்து
 கலந்(து) ஏலோ ரெம்பாவாய் !

**புள்ளின்வாய் கீண்டானை :** பள்ளத்தில் மேயும் பறவை உருக்கொண்டு வந்த கள்ள அசுரன் ஆகிய பகன் என்னும் அசுரனைப் பிளந்தபடி.

**பொல்லா அரக்கனை :** 'கொடுமையிற் கடுவிசை அரக்கன்' ஆகிய இராவணனை; 'முன் பொலா இராவணன்' என்னும் இத்தனை போக்கி அவன் தண்ணிமைக்கு ஒருபாசுரம் இல்லையிறே.

**கிள்ளிக் களைந்தானை :** வீரபத்தினி ஆகையாலே 'சிலை எடுத்து' என்னுமா போலே, கிள்ளி எடுத்தார்கள்; திருவிளை யாடு சூழலில் நோவுபட்ட இடங்களைக் கிள்ளிப் போகடுமா போலே, தோஷாம் ஸத்தை வாங்கிப் போகட்டபடி. முயற்சி சிறிதும் வேண்டாமல் மிக எளிதில் தொலைத் தொழித்தமை கூறியவாறு.

**கீர்த்திமை :** எதிரிகளுக்கும் நெஞ்சு உளுக்கும்படியான வீரசரிதம்; உகவா தார்க்கும் விடவொண்ணுத வீரம், உகந்த பெண்களுக்குச் சொல்ல வேணுமோ ? இராவணன் பெருமாள் வீரத்துக்கு இலக் கானுன் ; தங்கை (சூர்ப்பநகை) அழகிலே கண்கலங்கினுள் ; தம்பி (விபீஷணன்)சீலத் துக்கு இலக்கானுன்.

**பாடிப்போய் :** பாட்டே தாரகமாகப் போனுர்கள். போகும் வழிநடைக்குத் தாரகம் திருநாமம் இறே. 'தன்தாள்பாடி' என்னக் கடவதிறே.

**பிள்ளைகள் எல்லோரும் :** நாம் சென்று எழுப்ப வேண்டும் பால்யைகளும், உனக்கு முன்னே விழித்து எழுந்து புறப்பட்டார் கள்.

**பாவைக்களம் புக்கார் :** கிருஷ்ணன் பெண்களை மெய்க்காட்டுக் கொள்ளும்

சங்கேத ஸ்தலம் சென்று சேர்ந்தார்கள். 'பாவைக்களம்' என்பது இந்த்ராணி யையும் ரதியையும் நோற்கைக்குப் பெண்கள் திரளும் இடம். திரளும் இடத்தை நெற்களம் போர்க்களம் என்னுமாபோலே.

**வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று :** வெள்ளி என்னும் விண்மீன் உச்சிக்கு வந்துவிட்டது. வியாழன் என்னும் விண் மீன் மறைந்து போயிற்று.

**புள்ளும் சிலம்பினகாண்:** பறவைகள் துயில் உணர்ந்தமை மாத்திரமே அன்றி இரை தேடவும் சிலம்பிப் பறந்து சென்றன. கீழேயும் புள்ளும் சிலம்பின என்றது; அங்கு (6) கூட்டில் நின்றும் ஒலி செய்த படி சொல்லிற்று; இங்கு (13) கூட வழியே போம் இடமெல்லாம். போய் உலகின் பொருட்டுச் சிதறினபடி சொல்லுகிறது.

**போதரிக்கண்ணினாய் :** பூவும் மானும் போன்ற கண்; பூவில் படிந்த வண்டு போன்ற கண்; பூவோடு சீறுபாறு என்கிற கண்; உலாவுகின்ற மான் போலே இருக்கின்ற கண் என்னவுமாம். 'அரி' மான் வண்டு சத்ரு என்பன குறிக்கும்.

**பள்ளிக்கிடத்தியோ :** கிருஷ்ண ஸ்பரிஸம் உடையதொரு படுக்கையை மோந்து கொடுகிடக்கிறாயோ? விளைந்து கிடக்க உதிர்நெல்லைப் பொறுக்கு கின்றாயோ? பார்த்த பார்த்த இடமெங்கும் பெருக விளைந்து கிடவாநிற்க, உஞ்சவ்ருத்தி பண்ணி உயிர்வாழ்வார் போன்றதோ நின் செயல்.

**கள்ளம் தவிர்ந்து கல:** கள்ளமாவது, தனியே கிருஷ்ணகுண சேஷ்டிதங்களை நினைத்துக் கிடக்கை; அத்தைத் தவிர்ந்து எங்களோடு வந்துசேர்ந்துகொள். எங்களுக்கு உன்னைக் காட்டாதே மறைக் கையாகிற ஆத்ம அபகாரத்தைத் தவிர்ந்து எங்களோடே வந்து கல.

சேஷத்தை அபகரித்தால் சேஷியை க்ஷமை கொள்ளலாம்; சேஷித்வத்தை அபகரித்தால் பொறுத்தோம் என்பார் இல்லை; குற்றம் நின்றேபோம் அத்தனை.(13)

உங்கள் புழைக்கடைத்
தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து
ஆம்பல்வாய் கூம்பினகாண்
செங்கல் பொடிக்கூறை
வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில்
சங்கிடுவான் போதந்தார்
எங்களை முன்னம்
எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய்;
நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம்
ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணானைப்
பா(டு) ஏலோ ரெம்பாவாய்!

**உங்கள்புழைக்கடை:** இவள் எழுந் திராத இன்னாப்பாலே 'உங்கள் புழைக் கடை என்று வேறு கூறிட்டுச் சொல்லு கிறார்கள். 'நீர் நுமது என்றும், யானே என்றனதே' என்றும் அகங்கார மமகா ரங்களை விடத்தக்கனவாக உணர்ந்தவர் கள், உங்கள் எங்கள் என்றது முரணன்றோ? எனில், தேகாத்ம அபிமா னத்தால் வரும் அகங்காரமே த்யாஜ்யம்; பகவத் சம்பந்தத்தால் வருமவை உத் தேஸ்யம்; 'அபிமான துங்கன்' என்றும், 'என்னுடைய பந்தும் கழலும்' என்றும் சொல்லிற்றிரே.

**செங்கழுநீர் வாய் மலர்ந்து, ஆம்பல் வாய் கூம்பினகாண்:** பொழுது புலர்ந்து விடிந் தமைக்கு அடையாளம் சொல்லிற்று.

**செங்கற் பொடிக்கூறை வெண்பல் தவத் தவர்:** சேற்றுச் செம்மண் புழுதியிலே புடைவையைப் புரட்டி, இராப்பொழுது வெற்றிலைதின்று கிடந்து, பிரம்மச்சரியமும் விரதமும் தோற்றப் பல்லை விளக்கித் தண்ட பரிகாரார்த்தமாகத் தபோ வேஷத்தை உடையரான சிவத்விஜரும் கூடத் தங்கள் தேவதைகளை ஆராதிக்கும் காலமாயிற்று. அசுத்தரும் கூட எழுந் திருக்கும் காலமாயிற்று என்கை.

தாமஸ ப்ரகிருதிகளைச் சொல்லுகிறது என்று எம்பார்; தம ப்ரஸுரர் உணர்ந் தார்கள் என்று சொல்லியோ எழுப்பு வது என்று அவள் நினைத்திருக்கும் என்று

தத்வநிஷ்டரான ஸந்நியாசிகளைச் சொல்லு கிறது என்று திருமலைநம்பி.

பகவத் விஷயத்தில் ஸக்தராய், இதர விஷயங்களில் விரக்தராய், காஷாய வஸ்த்ரங்களையே தரித்து, போக்ய த்ரவ் யங்களில் விரக்தராய் ஸாத்விகராய் இருக்கும் ஸந்நியாசிகள் ஸந்தியா வந்த னங்களைப் பண்ணி அகங்களிலே திருவா ராதனம் பண்ணும் காலமாய்த்து என்கை.

**திருக்கோயில்:** என்றது அவர்கள் சொல்லும் கூற்றாலே.

**சங்கிடுவான்:** 'சங்கு' என்றது ஆரா தன உபகரணத்துக்கு உபலட்சணம்; குச்சியிட என்றுமாம்.

**வாய்பேசும்;** ஹ்ருதயத்தில் இல்லாதது வாயாலே பேசலாமோதான்; நின் நினைவும் சொல்லும் விபரீதமாய் இருக்கின்றன. உக்தி மாத்ரமேயாய் அநுஷ்டானம் இன்றிக்கே இருக்கை. கிருஷ்ணனோடே பழகின உனக்குப் பொய் சொல்லுகை வம்போ.

**நங்காய்:** பூர்ணை யிறே; சொல்லும் செயலும் சேராதார்க்கு ஒரு பூர்த்தியும் வேணுமோ?

**நாணாதாய்:** நாம் பிற்பாடரானோமே; சொன்னபடி செய்யப் பெற்றிலோமே என்னும் நாணம் உனக்கு இல்லையோ. நீ இருந்த ஊரில் பூசினியும் காயாதோ.

**நாவுடையாய்:** செயலில்லையாயினும் பேச்சின் இனிமையால் கேட்கும்படி நாவீறு பெற்றவளன்றோ.

**சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணன்:** திருவாழியையும் ஸ்ரீ பாஞ்ச ஜந்யத்தையும் ஏந்தி அந்த ஸ்பர் ஸத்தாலே வந்த வளர்ச்சியை உடைய திருக்கைகளை உடையவனாய், அவற்றிலே வந்து அலை எறிகிற கண்களையும் உடைய கிருஷ்ணன்.

சந்திர ஆதித்தியர்கள் சேர உதித்தாற் போலே இருக்கிற இரண்டு திவ்யாயுதங் களையும் கண்டு, அலறுவதும் மொட்டிப் பதும் ஆகாநிற்கும் தாமரை மலர் போன்ற கண்களை உடைய கிருஷ்ணன்.

க்ருஷ்ணன் கையில் இப்போது ஆழ்வார் கள் உண்டோ வென்னில்; எப்போது முண்டு; அது பெண்களுகுத் தோற்றும்; அல்லாதார்க்குத் தோற்றாது.

எல்லே ! இளங்கிளியே !
இன்னம் உறங்குதியோ ?
சில்லென்(று) அழையேன்மின்
நங்கைமீர் ! போதர்கின்றேன் ;
வல்லைஉன் கட்டுரைகள் !
பண்டேஉன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே
நானேதான் ஆயிடுக !
ஒல்லைநீ போதாய்
உனக்(கு) என்ன வேறுடையை ?
எல்லோரும் போந்தாரோ ?
போந்தார்போந்(து) எண்ணிக்கொள் ;
வல்லானை கொன்றானை
மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப்
பா(டு) ஏலோ ரெம்பாவாய் !

**எல்லே:** இவள் பேச்சில் இனிமை யாலே 'எல்லே' என்று ஆச்சரியப்படு கிறார்கள்; சம்போதனை (விளி) யாகவுமாம்.

**இளங்கிளியே:** இளம் என்று கிளியை வ்யா வர்த்திக்கிறது. பசுமை நிறத்துக்கும் பேச்சின் இனிமைக்கும் கிளி ஒப்பாம் இத்தனை; பருவத்துக்கு ஒப்பாக மாட்டாது. ஒக்கிலும், பிராட்டிமார் பருவதத்துக்கு ஒப்பாம் இத்தனை. இவர்கள் கிளி; இவள இளங்கிளி.

**இன்னம் உறங்குதியோ:** நாங்கள் வருவதற்கு முன்பு உறக்கத்தைப் பொறுத் தோமாகிலும், நாங்கள் வந்தால் உறங்கக் கடவதோ? உத்தேசயம் கைபுகுந்தால் உறங்குவார் உண்டோ. கிருஷ்ணனு பவத்துக்கு ஏகாந்தம் பெற்றாலும் உறங்கக் கடவதோ.

**சில்லென்று அழையேன்மின்:** திரு வாய் மொழி பாடா நின்றால் செல்வர் எழுந் தருளுகையும் அஸஹ்யம் ஆமாறுபோலே, தான அனுபவிக்கிற பங்கயக் கண்ண னுடைய அநுஸந்தானத்துக்கு விக்னமாக,

சிலுகிடாதே கொள்ளுங்கோள் என்கிருள்.

**நங்கை மீர் போதருகின்றேன் :** எங்கள் தலையிலே குற்றம் சொல்லலாவதெல்லாம் சொல்லி, உன்தலையில் குற்றமில்லை என்னும்படி உபபாதிக்க வல்லையிறே. பண்டே உன் வாய் அறிதும் : நீ வெட்டிமை சொல்லவல்லை என்று நாங்கள் இன்றேயோ அறிகின்ருேம். பண்டே நன்கு அறிந்துளோம் அன்ருே.

**வல்லை உன் கட்டுரைகள் :** எங்கள் தலையிலே குற்றம் சொல்லலாவதெல்லாம் சொல்லி, உன் தலையில் குற்றமில்லை என்னும்படி உபபாதிக்க வல்லையிறே.

**வல்லீர்கள் நீங்களே :** உங்கள் வாசலிலே நான் வந்து துவளப் பேசாமற் கிடந்து வெட்டிமை சொல்லித் துயர்ப் படுத்த வல்லவர்கள் நீங்களே யல்லவா.

**நானே தான் ஆயிடுக :** இல்லாத குற்றத்தைச் சிலர் 'உண்டு' என்ருல் இல்லை என்னுதே இசைகையிறே வைஷ்ணவத்வ லக்ஷணம். "இராமபிராமன் காட்டுக்குச் சென்ற விஷயத்தில், கூனியாகிய மந்திரையின் கலகதோஷம், இளையதாயான கைகேயியின் தோஷம், தசரத சக்ரவர்த்தியின் தோஷம், இராமபிரான் சம்மதித்த தோஷம் ஆகிய இந்தத் தோஷங்களெல்லாம் காரணங்கள் அல்ல; எனது பாபமே அதற்குக் காரணம் ஆயிற்று" என்று பிறர் குற்றத்தையும் தன்னுடைய பாப பலன் என்ருனிறே ஸ்ரீ பரதாழ்வான். ஸ்வகுண அபதாநத்துக்காக கௌரவ்யரை அதிநிர்ப்பந்தம் பண்ணலாகாதென்னும் வேதார்த்தம் ப்ரகாசிக்கிறது.

**ஒல்லை நீ போதாய் :** எங்களுக்கு ஒரு க்ஷணமும் உன்னை ஒழியச் செல்லாமையாலே எங்கள் திரளிலே சடக்கெனப் புகுந்து கொண்டு நில்லாய்.

**உனக்கென்ன வேறுடையை :** பஞ்சலக்ஷங் குடியிலே பெண்களுக்குள்ள தொழியத் தனியே ஸ்வயம் பாகம் பண்ணுவாரைப் போலே உனக்கு வேறே சில உண்டோ ?

வைஷ்ணவ விஷயத்தைப் பகிஷ்கரித்துப் பற்றும் பகவத் விஷயத்திற்கும், தேவதாந்தரத்திற்கும் வாசியில்லை. இளைய பெருமாள், ஸ்ரீ பரதாழ்வானுடைய வதத்திலே உத்யோகித்து, வில்லிலே நாண் ஏறிடுவது, அம்பைத் திரிப்பதாகிற படியைக் கண்டு பெருமாளுக்கு அஸஹ்யமாய், "அவனுக்கு ராஜ்யத்தில் ச்ரத்தையில்லை, உனக்கு விருப்பமுண்டாகில் வாங்கித் தருகிருேம்" என்று அருளிச் செய்தபோது இளைய பெருமாள் தரைப் பட்டாற் போலே, இவளும் "உனக்கென்ன வேறுடையை" என்றதும், பொறுக்க மாட்டாதவளாயினள்.

**வல்லானை கொன்ருனை :** குவலயாபீடம் என்னும் மதயானையை அடக்கி அழித்து, நம் ஜீவநமான தன்னை நோக்கித் தந்தவனை, பிரதான மகிஷிகள் மூவரும் இவ்வபதாநத்துக்கிறே தோற்றுக் கிடப்பது. ஸ்ரீகஜேந்த்ராழ்வானைக் காத்ததனைக் காட்டிலும் இத்தையே குணமாக "ஓரானை காத்து ஓரானை கொன்று" என்று அருளிச் செய்தார் இறே.

**மாற்ருரை மாற்றழிக்க வல்லானை :** எதிரிட்ட சாணூரன் முஷ்டிகன் தொடக்கமான மல்லர்களைக் கொன்று, கம்ஸன் முதலியவர்களையும் சிறு முயற்சியும் இன்றி எளிதில் அழித்து, அஞ்சின பெண்களை வாழ்வித்தவனை.

**மாயனை :** எதிரிகளைத்தான் தோற்பிக்குமாறுபோலே நம்கையிலேதோற்ற ஆச்சர்ய பூதனை.

**பாட :** நம்முடைய தோல்வியும் அவனுடைய வெற்றியும் விளங்கும்படி நாத்தழும் பேறப் பாட.

'வாயினல் பாடி' என்பது அவதாரக் கிரமம் ; 'கேசவனைப் பாட' 'பாடிப்பறை கொண்டு' 'கீர்த்திமை பாடி' என்பன விரோதி நிவர்த்தகத்வம் ; 'முகில் வண்ணன் பேர் பாடி' என்றது வடிவழகுக்குத் தோற்றமை ; 'சங்கொடு சக்ரமேந்தும் பங்கயக்கண்ணனைப் பாடி' என்றது திவ்யாயுதங்களுக்கும் அவயவ சோபைக்கும் தோற்றமை ;

இங்கு, வெறுங் கையோடே நின்று வென்ற படியையும், தங்களுக்குத் தோற்றபடியையும் பாடுகிறார்கள்.

1. 'எல்லே இளங்கிளியே': பகவத் விஷயத்திலே ருசியுடையார் பேச்சும் உத்தேஸ்யம்.

2. 'இன்னம் உறங்குதியோ': பாகவத சகவாசம் சித்தித்தால் புறம்பு அந்யபரதை பண்ணுதல் தவறு.

3. 'சில் என்று அழையேன்மின்': ருசியுடையார்க்கு எல்லாம் சொன்னாலும் பொறுக்க வேணும்.

4. 'நங்கைமீர் போதருகின்றேன்': பகவத் விஷயத்தில் ஈடுபட்டவர்களைக் கௌரவ்யதை தோற்றவே எப்போதும் பேசவேணும்.

5. 'நானேதான் ஆயிடுக': பிறர் குற்றத்தையும் தன் குற்றமாகக் கொள்ள வேணும்; கௌரவ்யரை அதி நிர்ப்பந்தம் பண்ணலாகாது.

6. 'ஒல்லை நீ போதாய்': பாகவதர்களோடு கூடுதல் ஸத்தாஸித்தி.

7. 'உனக்கென்ன வேறுடையை': ச்ரேஷ்டர் வர்த்தித்தபடி வர்த்தியா தொழிகை தவறு.

8. எல்லோரும் போந்தாரோ: வைஷ்ணவர்கள் அனைவருமே உத்தேச்யராவர்.

9. 'போந்து எண்ணிக் கொள்': ஒருவர் குறைந்தாலும் பகவத் அநுபவத்துக்குப் பெருங்குறை.

10. 'மாயனைப் பாடு': திரண்ட பாகவதர்களுக்கு வாழ்வாவது, 'உண்ணுஞ் சோறு' என்கிற படியே பகவத் விஷயாநுபவமே என்கிறது.





சிங்கார வேலர், சிக்கல் நாகப்பட்டினம்.

# தல வரலாற்றுக் குறிப்புகள்

(முற்றொடர்ச்சி)

## 11. திருப்பாதிரிப்புலியூர் :

இது நடு நாட்டுப் பாடல் பெற்ற சிவத் தலங்களுள் ஒன்று. இந்நாளில் கடலூர் (புது நகர்) என வழங்கும் இருப்புப்பாதை நிலையத்திற்கு மேற்கே கூப்பிடு தொலைவில், கெடில நதியின் தென் கரையில் உள்ளது. பாதிரி மரம் தல விருட்சமாக இருப்பதாலும், புலிக்கால் முனிவர் (வியாக்கிர பாதர்) இங்கு வழிபட்டுப் பேறு பெற்றதனாலும் இதற்குத் திருப்பாதிரிப் புலியூர் எனப் பெயர் உண்டாயிற்று. புலியூர் என்னும் சிதம்பரத்திற்கு வடக்கே யிருத்தலால், இது வட புலியூர் எனவும் வழங்கப் பெறும். பாதிரி மரத்திற்குப் பாடலம் என்றும் பெயருண்டு. ஆதலின் அருணகிரி நாதர் தம் திருப்புகழில் 'பாடல வளநகர்' என்று இதனைக் குறிப்பிட்டுள்ளார். மகேந்திர வர்ம பல்லவனால் சமயம் மாறிய குற்றத்திற்காகக் கற்றூணைப் பூட்டிக் கடலில் பாய்ச்சப் பெற்ற திருநாவுக்கரசர், கல்லே புணையாக மாறி அமைய மிதந்து வந்து இங்குக் கரையேறினார். இவ்வற்புத நிகழ்ச்சியால் இத்தலம் தனிப் பெருமை பெற்றுத் திகழ்கின்றது. அப்பர் பெருமான் கரையேறிய இத்தலத்தின் பகுதியை, இன்றும் மக்கள் கரையேற விட்ட குப்பம் என வழங்கி வருகின்றனர். ''கரையேற விட்ட முதல்வா உன்னை அன்றியும் ஓர் கதியுண்டாமோ?'' என்பது சிவஞான சுவாமிகள் பாடிய ஒரு பாடலின் ஈற்றடி.

அப்பர் கல்லே புணையாகக் கடலினின்று கரையேறிய அருள் நிகழ்ச்சியின் நினைவாக, ஆண்டுதோறும் சித்திரை மாதம் அனுஷ நட்சத்திரத்தில் இங்குத் திருவிழா நடத்தப்படுகிறது. கடலில் மிதந்து கரையேறிய திருநாவுக்கரசர் 'ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய்' எனத் தொடங்கும் சிறந்த திருப்பதிகத்தை இங்கு அருளிச் செய்துள்ளார். ஞான சம்பந்தர் பதிகமும் இதற்கு உண்டு. இக்கோயிலில் இராஜராஜன், இராஜேந்திரன், இராஜமகேந்திரன், வீர ராஜேந்திரன், முதல் குலோத்துங்கன், விக்கிரம பாண்டியன், வீர விருபண்ணன் முதலிய பல அரசர்களுடைய கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இலக்கணம் சிதம்பரநாத முனிவர் இதற்குத் தல புராணம் பாடியருளினார். தொல்காப்பியத் தேவர் என்பவர் பாடிய திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம், மிகவும் இலக்கியச் சுவை நிரம்பியது. இறைவன் தோன்றாத் துணை நாதர், பாடலேசுவரர். இறைவி தோகை அம்பிகை, பெரிய நாயகியம்மை. சந்நிதி வீதியில் ஸ்ரீ ஞானியார் மடாலயம் உள்ளது.

## 12. திருவகீந்திரபுரம்:

ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த 108 திவ்விய தேசங்களில், நடு நாட்டிலுள்ளவை, திருக்கோவலூரும் திருவகீந்திர புரமும் ஆகும். அகீந்திரன் (அனந்தாழ்வான், ஆதிசேஷன்) பூசித்த தலமாதலால், இதற்குத் திரு அகீந்திரபுரம் எனப் பெயர் அமைந்தது. திருமாலின் அர்ச்சாவதாரம் சைத்தம், தைவம், ஆர்ஷம், மானவம் என நான்கு வகைகளாக விளங்கும். அவற்றுள் திருவகீந்திரபுரத்தில் விளங்குவது பகவான் அநாதிகாலமாகத் தானே தோன்றித் திகழும் சைத்தம் என்னும் அர்ச்சாவதார மாகும். இங்குத் திருக்கோயிலின் ஒரு புறம் கெடில நதி வளைந்தோடுவதும், மற்றொரு புறத்தில் சிறு குன்றின் மேல் கோயில் அமைந்திருப்பதும், இயற்கைக் காட்சியின் மாட்சிமை மிக்குத் திகழ்தல் நேரில் தரிசித்து மகிழத் தக்கதாகும். இங்குள்ள பெருமாளுக்குத் தெய்வ நாயகன், தேவநாதன், தெய்வநாயக மூர்த்தி எனப் பல பெயர்களுண்டு. நாச்சியாருக்கு வைகுண்ட நாயகி, செங்கமல வல்லித் தாயார் என்பன பெயர்கள். கிழக்கே திருமுக மண்டலம். நின்ற கோலம். சந்திர விமானம்.

தீர்த்தங்கள் கருட நதி, சேஷ தீர்த்தம். ஆதி சேடனுக்கும், சந்திரனுக்கும், கருடனுக்கும் பிரத்தியட்சம். இங்குள்ள அயக்கிரீவ மூர்த்தி திருவருட் சிறப்பால் மிகவும் பிரசித்தி வாய்ந்தவர். • திருமங்கையாழ்வார் மங்களா சாசனம். வேதாந்த தேசிகர் இதனைத் தமிழிலும் வடமொழியிலும் மிகப் பல தோத்திர நூல்களால் போற்றியுள்ளார்.

## 13. சிதம்பரம்:

இது சைவ சமயத்தின் தலை சிறந்த பெருந்தலம். உலகமே பெரிதும் வியந்து போற்றும் சிறந்த கலை வடிவமாகத் திகழும் ஸ்ரீ நடராஜப் பெருமான் எழுந்தருளி விளங்கும் புண்ணியப் பெருந்தலம். எத்தனையோ பல கோயில்கள் இருப்பினும், சைவத் திருமுறைகளில் கோயில் என்றே சிறப்பித்துப் பெரிதும் போற்றிப் பாராட்டப் பெறுவது சிதம்பரமே யாகும். இங்கு பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்னும் முனிவர்கள் வழிபட்டு அருள் பெற்றனர். அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர் என்னும் நால்வர்களும் இதனைச் சிறப்பாகப் பாடியுள்ளனர். சேக்கிழார் பெரிய புராணம் பாடி அரங்கேற்றிய தலம். விராட் புருடனுக்கு இதயத்தானமாக விளங்கும் தலம். புலியூர், பெரும்பற்றப் புலியூர், புண்டரீகபுரம், பொன்னம்பலம் முதலிய பெயர்களாலும் இது வழங்கப் பெறும். இது பஞ்ச பூதத் தலங்களுள் ஆகாசத் தலம். இக்கோயிலின் கிழக்குக் கோபுரம் இரண்டாம் குலோத்துங்கனாலும் (கி.பி. 1133-1150), தெற்குக் கோபுரம் கோப்பெருஞ் சிங்கன் (கி.பி 1232-1243) என்னும் பல்லவ மன்னனாலும், மேற்குக் கோபுரம் சடா வர்மன் சுந்தர பாண்டியனாலும் (கி. பி. 1251 — 1268), வடக்குக் கோபுரம் விஜய நகர அரசர் ஆகிய கிருஷ்ண தேவராயராலும் (கி.பி. 1506-1530) கட்டப் பெற்றது. மேற்குக் கோபுர வாயிலின் உட்புறங்களில், 108 நடன வகைகளைக் காட்டும் முறையில் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இக் கோயிலுக்கு மாணிக்க வாசகர் கீழ்க் கோபுர வாயில் வழியாகவும், சம்பந்தர் தெற்குக் கோபுர வாயில் வழியாகவும், திருநாவுக்கரசர் மேற்குக் கோபுர வாயில் வழியாகவும். சுந்தரர் வடக்குக் கோபுர வாயில் வழியாகவும் எழுந்தருளி வழிபட்டனர். இக் கோயிலில் உள்ள பாண்டிய நாயகம் என்னும் முருகன் கோயிலும், சிவகாம சுந்தரி அம்மை கோயிலும், அற்புத சிற்ப வேலைப்பாடுடையவை. கனக சபையின் முன்னர்த் தெற்கே கோவிந்தராஜப் பெருமாள் பள்ளிகொண்ட நிலையில் எழுந்தருளி விளங்குகின்றார். இதனைத் 'தில்லைத் திருச்சித்திர கூடம்' என வழங்குவர். இதனைக் குல சேகர ஆழ்வாரும், திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர். இத்தலத்தை வழிபட்டுத் திருநீலகண்டர், திருநாளைப் போவார் [நந்தனார்], கூற்றுவ நாயனார், கணம் புல்ல நாயனார், கோச் செங்கட்சோழ நாயனார் முதலிய பலர் வழிபட்டுப் பேறு பெற்றனர். மனைவியாருடன் திருநீலகண்டர் குளத்தில் மூழ்கி இளமை பெற்று எழுந்த இளமையாக்கினார் கோயில், தில்லைக் காளி கோயில் முதலியன இங்கு உள்ளன. இக் கோயிலில் சோழர், பாண்டியர், சேரர், விஜய நகரமன்னர், நாயக்க மன்னர் ஆகிய பலரின் கல்வெட்டுக்கள் உள்ளன. தில்லையின் பெருமைக்கு எல்லையே இல்லை. உமாபதி சிவாசாரியர் பாடியருளிய கோயிற் புராணம் முதலியன, இத்தலத்தின் சிறப்பை விளக்கும்.

## 14. வடலூர்:

இத்தலம் திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் இராமலிங்க அடிகளாரால் புகழும் புனிதமும் பெற்றதாகும். இங்கு அடிகளார் சத்திய ஞான சபை, தருமச் சாலை ஆகியவற்றை நிறுவியருளினார். இதற்கு அருகிலுள்ள மேட்டுக் குப்பம் சித்தி வளாகத் திருமாளிகையிலேயே ஸ்ரீமுக ஆண்டு தைப் புனர்பூச நட்சத்திரம் வெள்ளிக்கிழமை இரவு 12 மணிக்கு அடிகளார் திருக்காப்பிட்டுக் கொண்டு மறைந்தருளினார் (1874). சமரச சன்மார்க்க நெறியிலும், ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமையிலும் ஈடுபாடுடைய அன்பர்கள் அனைவரும், சிறப்பாகத் தரிசித்து உய்யத் தக்க நல்ல தலம்.

## 15. விருத்தாசலம்:

இது தேவார காலத்தில், சைவ சமய ஆசிரியர்களால் திருமுது குன்றம் என வழங்கப் பெற்றுள்ளது. இது நடு நாட்டுத் தலங்களுள் ஒன்று. சம்பந்தர், சுந்தரர் பாடல் பெற்றது. இங்கு வீர சைவ சமயத்தைச் சேர்ந்தவரும், திருப்போரூர்ச்

சிதம்பர சுவாமிகளின் குருவுமாகிய குமார தேவர் திருமடம் அமைந்துள்ளது. சுவாமி பெயர் முதுகுன்ற நாதர், பழமலை நாதர், விருத்த கிரீசுவரர். அம்பிகை பெரிய நாயகி எனவும், விருத்தாம்பிகை எனவும் வழங்கப் பெறுவர். இங்கு அம்பிகைக்கு இரண்டு சந்நிதிகள் உள்ளன. ஸ்ரீ குமார தேவர்க்கு அருள் புரிந்த பாலாம்பிகைக்குத் தனியே சந்நிதி உள்ளது. இங்குள்ள தல விநாயகர்க்கு ஆழத்துப் பிள்ளையார் என்பது பெயர். அதற்கு ஏற்ப இவரைத் தரைக்குக் கீழே 16 படிகள் இறங்கித் தரிசிக்க வேண்டியிருக்கின்றது. சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம் பாடி 12,000 பொன் பெற்று, அதனை மணிமுத்தாற்றில் இட்டுத் திருவாரூர்க் குளத்தில் பெற்றார் என்பது வரலாறு. கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த இலிங்கா ரெட்டியாரும், அவர் மகன் அண்ணாமலை ரெட்டியாரும் திருப்பணி செய்து, கி.பி. 1623-இல் கும்பாபிஷேகம் செய்தனர். கி.பி. 1602-இல் முத்துக்கிருஷ்ணப்பப ராயர் என்பவர் இங்குத் திருமுதுகுன்றுடையார்க்குப் பஞ்சாவரணப் பிராகாரம் கட்டி வைத்தனர் என ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது. இராஜ ராஜன், குலோத்துங்கன், கோப்பெருஞ்சிங்கன், செம்பியன் மாதேவி முதலிய பலரும் இக்கோயிலுக்குப் பல நன்கொடைகளும் திருப்பணிகளும் செய்துள்ளனர். ஒரு காலத்தில் பிரமனின் படைப்புக்கு முன்னர்ச் சிவபெருமானே இங்கு மலைவடிவமாக விளங்கினார் என்பது வரலாறு. அதனாலேயே பழமலை, முதுகுன்றம், விருத்தகிரி எனப் பெயர்கள் அமைந்தன என்பர். சுக்கிராசாரியர், யாக்ஞவல்கியர், சிகண்டி, அகத்தியர் முதலிய பலர் இங்கு இறைவனை வழிபட்டு அருள் பெற்றனர். கோயிலின் வடக்கே உள்ள நதி மணிமுத்தாறு எனப்படும். இறந்தவர்களின் எலும்புகளை இட்டு முழுகுவது, கங்கை நதியைப் போல இங்குச் சிறப்பாகக் கருதப் படுகிறது. துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இத்தலத்தில் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார்.

## 16. திருப்பெண்ணாகடம்:

இது விழுப்புரம்-திருச்சிராப்பள்ளி இருப்புப் பாதையில் ஒரு நிலையம். நிலையத்துக்கு ஒரு கல் தொலைவில் கோயில் உள்ளது. தேவ கன்னியர் (பெண்), காமதேனு (ஆ), ஐராவதம் ஆகிய வெள்ளை யானை (கடம்) என்பவர்கள் பூசித்துப் பேறு பெற்றதனால், இத் தலத்திற்கு இப்பெயர் அமைந்தது. கடந்தை எனவும் இத்தலத்தின் பெயர் வழங்கப் பெறும். இங்குள்ள கோயிலின் பெயர் தூங்கானை மாடம் என்பது. கோயிற் கருவறையின் அமைப்பு, தூங்குகின்ற யானையின் பின்புறம் போன்ற வடிவில் இருப்பதனால், இப்பெயர் ஏற்பட்டது. இதனைக் 'கஜப் பிருஷ்ட விமானம்' என வடமொழியிற் கூறுவர்.

பொன்னார் திருவடிக்கு ஒன்றுண்டு
விண்ணப்பம் போற்றிசெயும்
என்னாவி காப்பதற்கு இச்சையுண்டேல்
இருங்கூற்று அகல
மின்னாரும் மூவிலைச் சூலம் என்மேற்
பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை
மாடச் சுடர்க்கொழுந்தே.

எனப் பாடி வேண்டித் திருநாவுக்கரசர், தம்முடைய தோளின் மேல் சூலக் குறியும் இடபக் குறியும் பெற்ற தலம். சிவனடியார்களை வரவேற்றுப் பாத பூசை செய்து அமுது செய்விக்கும் தொண்டில் நிலை நின்று, ஒருநாள் தமது ஏவற் பணியாளனே அடியவராக வர, அவருக்குப் பாதபூசை செய்ய முற்படுங்கால், 'இவர் நம் இல்லத்தில் முன்பு ஏவலராக இருந்து அகன்ற தமர் போலும்' என்ற நினைவினால் நீர் வார்த்தற்குச் சிறிது தாமதம் நேர்ந்ததனால், சிவனடியாரின் முன்னைய நிலை குறித்து எண்ணி வெள்கியே நீர் வார்க்கத் தயங்கினள் என்று கருதி, மனைவியின் கையை உடனே வாளால் தறித்துத் தாமே கரகநீர் வார்த்துப் பூசித்தவராகிய கலிக்கம்ப நாயனார் அவதரித்த தலம். சைவ சித்தாந்தத் தலை மணி நூல் ஆகிய சிவஞான போதம் அருளிச் செய்த மெய் கண்ட தேவர் அவதாரத் தலம். அவர்தம் தந்தையார் ஆகிய அச்சுத களப்பாளர் என்பவர் வாழ்ந்த தலம். மெய்கண்டார் அவதரித்த இல்லம் இருந்த இடம், 'களப்பாளர் மேடு' என இன்றும் வழங்கி வருகின்றது. அவ்விடத்தில் மெய்கண்டார்க்குக் கோயில் ஒன்று சிறிய அளவில் அண்மையில் அமைக்கப்பட்டுள்ளது. சைவ சித்தாந்த சந்தான ஆசிரியர்களுள் ஒருவராகிய மறைஞான சம்பந்தர், மருதூரில் தோன்றி, இப் பெண்ணாகடத்தில் வாழ்ந்திருந்தார். "பெருமை

உலகு பெற விளங்கும் பெண்ணாகட மூதூர்'' எனச் சேக்கிழார் இத்தலத்தைச் சிறப்பித்தார். இங்குள்ள கல் வெட்டொன்று 'கோச் செங்கணீச்சுவரம் உடைய மகாதேவர்' எனக் குறிப்பதனால் இவ்வூர்த் தூங்கானை மாடக் கோயில் கோச்செங்கட் சோழ நாயனார் கட்டுவித்தது என்பது புலனாகின்றது.

## 17. திருவண்ணாமலை :

இது விழுப்புரம்-காட்பாடி இருப்புப்பாதையில் உள்ளது. கோயில் மிகப் பெரியதாகப் பரந்து விரிந்துள்ளது. பஞ்சபூதத் தலங்களுள் இது நெருப்புத் தலம். ஆறு ஆதாரத் தலங்களுள் திருவண்ணாமலை மணிபூரகத் தலம் என்பர். நினைக்க முக்தி தரும் தலம். திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிக் காணமுடியாத நிலையில், சிவ பெருமான் சோதிப் பிழம்பாய் வெளிப்பட்டு நின்ற தலம். இவ்வரலாற்றுக்கேற்ப நில நூல் அறிஞர்களும் (Geologists), இம்மலை நெருப்பினால் அமைந்தது, நெருப்புத் தன்மை உடையது (Igneous rock) என்று ஆராய்ந்து கூறுகின்றனர்.

இம்மலை கடல் மட்டத்திற்கு மேல், 2,668 அடி உயரம் உள்ளது. அப்பர், சம்பந்தர், மாணிக்க வாசகர், குகை நமச்சிவாயர், குரு நமச்சிவாயர் முதலிய சான்றோர்கள் இத்தலத்தைப் பாடியுள்ளனர். திருப்புகழ் பாடிய அருணகிரி நாதர் இத்தலத்திலேயே தோன்றி வாழ்ந்து அருள் பெற்று விளங்கியவராவர். இங்கு ஈசான்ய மடம் என்பது சிறந்து விளங்குகின்றது. குன்றக்குடி ஆதீனத்தின் முதற் பெரும் குரவராகிய தெய்வசிகாமணி தேசிகர் இந்தத் தலத்திலேயே தோன்றியவர் ஆவார். உலகப் புகழ் பெற்ற சாமர்செட் மாம் (Somerset Maugham) முதலிய மேலை நாட்டு அறிஞர்களும் வியந்து போற்றி மகிழ்ந்த ஸ்ரீ ரமண மகரிஷி அவர்கள் அமைத்த ரமண ஆசிரமமும், இத்தலத்திற்கு ஒரு பெரும் சிறப்பை அளிப்பதாகத் திகழ்ந்து வருகின்றது. சேஷாத்திரி சுவாமிகள் என்பவரும் இங்குத் தவஞ் செய்து அருள் பெற்றார்.

அண்ணாமலையார் கோயில், மலையின் அடிவாரத்தில் இருக்கின்றது. திருவண்ணாமலையில் நிகழும் கார்த்திகை விளக்கீடு பற்றிய குறிப்புக்கள் பண்டைச் சங்க நூல்களிலேயே ஆங்காங்கு அமைந்திருக்கக் காண்கிறோம். நாட்டுக் கோட்டை நகரத்தார் இத்தலத்திற் பற்பல அறங்கள் செய்துள்ளனர். மாணிக்க வாசகர், திருவெம்பாவையும், திரு அம்மானையும் பாடிய தலம். மலைச் சுற்றில் 'அணி அண்ணாமலை' என்ற ஒரு கோயிலும் உள்ளது. அதனையும் சமயாசிரியர்கள் வழிபட்டுள்ளனர். இத்தலத்தில் மொத்தம் 360 தீர்த்தங்களும், 400 இலிங்கங்களும் உள்ளன என்பர். இங்குள்ள வல்லாள மகாராஜன் கோபுரம், கிளிக் கோபுரம் என்பன குறிப்பிடத் தக்கவை. கிருஷ்ண தேவராயர் கி. பி. 1014-ஆம் ஆண்டில் ஆயிரக்கால் மண்டபத்தையும், எதிரிலுள்ள திருக்குளத்தையும், பதினொரு நிலைக் கோபுரத்தையும், வேறு சில திருப்பணிகளையும் செய்துள்ளார். கோயில் ஐந்து பெரிய பிராகாரங்களைக் கொண்டுள்ளது.

கிழக்கே இராஜகோபுரம் (உயரம் 217 அடி); தெற்கே திருமஞ்சனக் கோபுரம்; மேற்கே பேய்க் கோபுரம்; வடக்கே அம்மணி அம்மாள் கோபுரம் ஆகியவை உள்ளன. கோயில் 25 ஏக்கர் நிலப் பரப்பு உடையது. பதினாறு கால் மண்டபம், ஆயிரக்கால் மணடபம், ஞானப்பால் மண்டபம், தீர்த்தவாரி மண்டபம், திருவருள் விலாச மண்டபம், மாதப் பிறப்பு மண்டபம், உருத்திராக்க மண்டபம், நந்தி மண்டபம், அமாவாசை மண்டபம், காட்சி மண்டபம், பன்னீர் மண்டபம், வசந்த மண்டபம், மகா மண்டபம், திருக்கல்யாண மண்டபம், புரவி மண்டபம் எனப் பற்பல மண்டபங்கள் இங்குள்ளன. சித்தி விநாயகர், மங்கல விநாயகர், கொத்தள விநாயகர், யானை திறை கொண்ட விநாயகர், சம்பந்த விநாயகர் எனப் பல விநாயகர்கள் இங்குள்ளனர்.

அருணகிரிநாதர் தம் உயிரை மாய்த்துக் கொள்ள வல்லாள மகாராஜன் கோபுரத்திலேயே ஏறிக் கீழே குதித்தனர் என்பர். அப்பொழுது அவரைக் காப்பாற்றிய முருகன், கோபுரத்து இளையனார் என வழங்கப்படுகின்றார், 'அதல சேடனாராட' எனத் தொடங்கும் திருப்புகழ் பாடிப் பிரபுட தேவ மகாராஜனுக்கு முருகன் தரிசனம் கிடைக்கும்படி செய்தார் அருணகிரி நாதர் என்பது வரலாறு. அங்ஙனம் தரிசனம் வழங்கிய முருகனே கம்பத்து இளையனார் எனப் படுகின்றார். அருணகிரி நாதர் சம்பந்

தாண்டான் என்பவனோடு வாது செய்து, பாரிசாத மலரைக் கொணரக் கிளி வடிவம் கொண்டு, விண்ணுலகம் சென்று திரும்பினார் என்பது வரலாறு. அவ்வரலாற்றை நினைவூட்டும் முறையில் கிளி உருவம் அமைந்த கிளிக் கோபுரம் விளங்குகிறது.

சேரர் சோழர் பாண்டியர் பல்லவர் இராஷ்டிரகூடர் ஒய்சளர் துளுவர் முதலிய அரசர்களின் கல்வெட்டுக்கள் பல, இக் கோயிலில் காணப்படுகின்றன. இக்கோயிலின் முதற் பிராகாரத்து வட சுவரிலுள்ள மூன்றாம் இராசராசன் (கி. பி. 1216-1246) காலத்துக் கல்வெட்டு ஒன்றின் துணை கொண்டே, சிவஞான போதம் அருளிய ஆசிரியர் மெய்கண்ட தேவரின் காலம் (கி. பி. 1222), ஆராய்ந்து உறுதி செய்யப் பெற்றது. சைவ எல்லப்ப நாவலர் பாடிய அருணாசல புராணம், மிக்க சிறப்பு வாய்ந்த நூலாகும். தலவிருட்சம் மகிழ மரம், சுவாமி அண்ணாமலையார், அம்பிகை உண்ணாமுலையம்மை, அபீத குசாம்பாள்.

18. காஞ்சிபுரம் :

இது சென்னைக்குத் தென்மேற்கே 45 கல் தொலைவில், வேகவதி ஆற்றின் கரையிலுள்ளது. 'மலர்களில் முல்லையும், தேவ மாதர்களில் அரம்பையும், அறங்களில் இல்லறமும் போல, நகரங்களில் காஞ்சிபுரம் தலைசிறந்து விளங்குகின்றது' எனக் காளிதாசர் இதனைப் புகழ்ந்துள்ளார். 'கல்வியிற் கரையிலாத காஞ்சி மாநகர்' என்பது அப்பர் தேவாரம். கி. மு. 2-ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே இந்நகரம் பெரும் புகழ் பெற்று விளங்கியுள்ளது. பதஞ்சலி முனிவரின் மகா பாஷ்யத்திலும், மணிமேகலை பெரும்பாணாற்றுப் படை என்னும் சங்க நூல்களிலும், இந்நகரம் புகழப் பெற்றுள்ளது. கி. பி. 2-ஆம் நூற்றாண்டில் தொண்டைமான் இளந்திரையன் என்னும் அரசனின் தலைநகராக விளங்கியது. கி. பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் 9-ஆம் நூற்றாண்டு வரை இது பல்லவர்களின் தலைநகராக விளங்கி யிருந்தது. கி. பி. 642-ஆம் ஆண்டில் யுவான் சுவாங் என்னும் சீன யாத்திரிகர் இந்நகரைப் பார்வையிட்டு இதனைப் புகழ்ந்துள்ளார். நலாந்தா பல்கலைக் கழகத்துப் பேராசிரியராக விளங்கி யிருந்த திக்கநாகர், போதி தருமர், தருமபாலர் முதலியவர்களும், சந்திர குப்த மௌரியனின் அமைச்சராக விளங்கி அர்த்தசாத்திரம் எழுதிய சாணக்கியர் என்னும் கௌடில்யரும், காஞ்சி மாநகரில் தோன்றியவர்களே யாவர். 10 முதல் 13 வரையுள்ள நூற்றாண்டுகளில் சோழர்களின் ஆட்சியிலும், 14 முதல் 17 வரை விஜய நகர அரசர்களின் ஆட்சியிலும், பின்னர்ப் படிப்படியே ஆங்கில ஆட்சியின் கீழும் இந்நகரம் இருந்து வந்தது. பொய்கையாழ்வார், வேதாந்த தேசிகர், (கி. பி. 1268) ஆகியவர்களின் அவதாரத் தலம். திருமழிசையாழ்வார், கணிகண்ணர், ஆளவந்தார், திருக்கச்சி நம்பிகள், இராமாநுஜர் முதலிய வைணவச் சான்றோர்கள் வாழ்ந்த தலம். திருக்குறளுக்கு உரை வகுத்த பரிமேலழகர், உலகளந்த பெருமாள் கோயிலில் அருச்சகராக விளங்கியவர் ஆவர். கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியார் குமர கோட்டத்தில் அருச்சகராக விளங்கினார். சிவஞான சுவாமிகள் தமது சிவஞானபோதப் பேருரையை இங்குத் தங்கி யிருந்த பொழுதே இயற்றினார். ஆதி சங்கரர் இங்குக் காம கோடி பீடத்தை நிறுவி யருளினார். அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர், பட்டினத்தார், அருணகிரி நாதர் முதலிய சான்றோர்கள் பலரும் இத்தலத்தைப் பாடிப் போற்றியுள்ளனர்.

(1) வரதராஜப் பெருமாள் கோயில் : கஜேந்திரன் என்னும் யானையே மலை வடிவாக அமைந்து நிற்க, அதன்மீது இங்குப் பெருமாள் எழுந்தருளியிருப்பதாக ஐதிகம். ஆதலின் இது அத்திகிரி என வழங்கப்பெறும். சுவாமி தேவராஜர் என்றும், அருளாளப் பெருமாள் என்றும் வழங்கப்படுவார். நின்ற திருக்கோலம். படைப் பாற்றலைப் பெறுவதற்காகப் பிரமதேவர் இங்கு வேள்வி புரிந்து அருள் பெற்றார். பிரமன்பால் ஊடல் கொண்ட சரசுவதி, நீர் வெள்ளமாகப் பெருகி வேள்வியை அழிக்க முயன்றாள். அவள் நதிவடிவம் கொண்டு வேகமாக ஓடி வந்ததனால், ஆற்றுக்கு வேகவதி எனப் பெயர் வந்தது. பிரமதேவரின் வேண்டுகோளுக்கு இணங்கித் திருமால், திருவெஃகா ஸ்ரீ யதோக்த காரி எம்பெருமானாகக் குறுக்கே பள்ளி கொண்டு வேகவதியின் வெள்ளத்தைத் தடுத்துப் பிரமனுக்கு அருள் புரிந்தார். பிரமனின் வேள்வியிலிருந்து புண்ணிய கோடி விமானம் தோன்றியது. அப்புண்

ணியகோடி விமானத்திலேயே வரதராஜர் எழுந்தருளி விளங்குகின்றார். கோயிலின் கருவறையை அடைவதற்கு 24 படிகளை ஏறிக் கடந்து செல்ல வேண்டும். 24 தத்துவங்களுக்கு மேல் 25-ஆம் தத்துவமாகப் பரவாசுதேவன் ஆகிய திருமால் விளங்குகின்றார் என்னும் தத்துவ நுட்பத்தை இவ்வமைப்பு உணர்த்துகின்றது. வரதர் மேற்கு நோக்கியுள்ளார். அத்திகிரியின் கீழ் உள்ள குகையில் ஸ்ரீ அழகிய சிங்கரும், ஸ்ரீ ஹரிதாா்த்த தேவியும் விளங்குகின்றனர், கோயிலின் நூற்றுக்கால் மண்டபம் சிற்ப அழகு மிக்கது. விஜய நகர அரசர்கள் கட்டியது. அதன் வடக்கே உள்ள குளம் அனந்த தீர்த்தம். கொடிக் கம்பம் ஒரே கல்லில் 100 அடி உயரம் உடையது. ஐந்து பிராகாரங்களை யுடைய இக்கோயில் 23 ஏக்கர் நிலப்பரப்புடையது. கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த இராபர்ட் கிளைவ் நவரத்ன மாலையும், வியோனர்ட் பிளேசு நவரத்ன கிரீடமும் போன்ற, விலை மிகுந்த அணிகலன்களைச் சுவாமிக்கு வழங்கியுள்ளனர்.

(2) காமாட்சி அம்மை கோயில்: மதுரையில் மீனாட்சி அம்மை போலக் காஞ்சியில் சிறப்புற்று விளங்கும் அம்பிகை, காமாட்சி யம்மை யாவார். ஆதி சங்கரர் இவ்வம்பிகையை வழிபட்டு அருள்பெற்றார். காமகோடி பீடம் நிறுவினார். 'காயத்திரி மண்டபம்' என்னும் கருவறையில் எழுந்தருளியுள்ள காமாட்சி யம்மையின் திருமுன்பு ஸ்ரீ சக்கரம் அமைத்தார். எல்லாப் பூசைகளும் ஸ்ரீ சக்கரத்திற்கே நடைபெறுகின்றன. இங்குள்ள குளம் பஞ்ச கங்கைத் தீர்த்தம் எனப்படும். கோயிற் பரப்பு 4 ஏக்கர் 16 சென்டு. காமாட்சியம்மை கோயிலினுள் 'கள்வனூர்' என்னும் வைணவத் தலம் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. கோயில் திருக் காமகோட்டம் என வழங்கும். காமாட்சியைத் திருக் காமகோடி அம்மை என்றும் சொல்லுவர்.

(3) திருவேகம்ப நாதர் கோயில்: சைவ சமய ஆசிரியர்கள் நால்வரும் பாடியது. கரிகால் சோழன் அமைத்தது. 'தேசமெல்லாம் புகழ்ந்தாடும் கச்சித் திருவேகம்பன் செம்பொற் கோயில்' என மாணிக்க வாசகர் இதனைப் புகழ்ந்துள்ளார். காமாட்சியம்மை மணலால் அமைத்து வழிபட்ட லிங்கமாதலின், இது பிருதிவித் தலம் என்பர். ஏகாம்பரநாதர் என்பதற்கு, ஒற்றை மா மரத்தின் அடியில் வீற்றிருப்பவர் (ஏகம்—ஒன்று; ஆம்பரம்—மாமரம்) என்பது பொருள். வேதங்களே மாமரமாக விளங்குகின்றன என்பது ஐதிகம். கந்த புராணம் குறிப்பிடும் விகட சக்கர விநாயகர், ஆயிரக்கால் மண்டபத்தில் கோபுரத்தின் கீழ் விளங்குகின்றார். இக்கோயிலினுள் 'நிலாத் திங்கள் துண்டம்' என்னும் வைணவத் தலம் உள்ளது. சிவகங்கை, கம்பை நதி என்னும் இரு தீர்த்தங்கள் கோயிலின் இரண்டாம் பிராகாரத்தில் 1008 இலிங்கங்கள், ஒரே இலிங்கத்தில் அமைந்துள்ளன. ஆட்ஸன் (Hodgson) என்னும் ஆங்கிலேயர், இக்கோயில் திருமதில் திருப்பணி நடைபெறுவதற்குப் பெரிதும் துணை புரிந்தார். அவரின் நினைவாகத்தான், காஞ்சிபுரத்தில் 'ஆடிசன் பேட்டை' என்று ஒரு பகுதிக்குப் பெயர் ஏற்படுவதாயிற்று.

(4) கைலாச நாதர் கோயில்: இது காஞ்சியில் உள்ள வரலாற்றுச் சிறப்பு மிக்க, சிற்பத்திறன் செறிந்த பெருங் கோயிலாகும். இராஜசிம்மன் (கி. பி. 686-705) என்னும் பல்லவ அரசன் கட்டுவித்தது. திருநின்றவூர்ப் பூசலார் நாயனாருக்கு அருள் செய்ய, இறைவன் அரசனின் கனவில் தோன்றிப் பிறகு தள்ளிவைத்துக் கொள்ளுமாறு கூறியது, இக்கோயிற் கும்பாபிஷேகத்தையேயாகும். கைலாச நாதர் கோயில் "திருக்கயிலையின் அமைப்பையும் அளவையும் அருளால் அறிந்து, அதற்கு ஏற்பக் கட்டப் பட்டதே யாகும்" என்று, அருட்டிரு வீபுலாநந்த அடிகளார் விளக்கியுள்ளார். சிற்பக் கலைத் திறனுக்கே ஒரு பெரும் நிலையமாக இக்கோயில் விளங்குதலை ஆராய்ந்து வியந்து அறிஞர்கள் பாராட்டி யுள்ளனர். பல்லவர் மரபைப் பழிவாங்க உறுதி பூண்டு வெற்றி கொண்ட இரண்டாம் விக்கிரமாதித்தன் (கி. பி. 733-746) என்னும் சாளுக்கிய மன்னன், இக்கோயிலைக்கண்டு வியந்து, இதனை அழிக்கச் சிறிதும் மனம் வராமல், ஏராளமான நன்கொடைகள் வழங்கிப் போற்றி மகிழ்ந்து சென்றான் என வரலாறு கூறுகின்றது. இதனால் இக்கோயிலின் சிற்பக் கலைச் சிறப்பை யாவரும் உணரலாம்.

(5) வைகுண்டப் பெருமாள் கோயில்: இஃது இரண்டாம் பரமேசுரவர்மன் (கி.பி.

705-710) என்னும் பல்லவ மன்னனால் கட்டப்பட்டது. ஆதலின் பரமேச்சுர விண்ணகரம் எனவும் இது வழங்கப்படும். இதுவும் சிற்பக் கலைக்கும், கட்டிடக் கலைக்கும் மிகவும் புகழ் பெற்ற கோயிலாகும். இரண்டாம் பரமேசுரவர்மன் உயிர் நீத்தலும், இரண்டாம் நந்திவர்மன் அரசனாக முடி சூட்டப் பெறுதலும் பற்றிய பல வரலாற்றுச் சிறப்பு மிக்க சிற்பங்கள், இக்கோயிற் சுவர்களில் அழகுறத் தீட்டப் பெற்றுள்ளன. எனவே, இங்குள்ள சிற்பங்கள், அனைவரும் கண்டு மகிழத் தக்கவை. திருமங்கை ஆழ்வார் மங்களாசாசனம்.

19. திருத்தணிகை :

இஃது அரக்கோணம் - ரேணிகுண்டா இருப்புப் பாதையில் உள்ள ஒரு நிலையம். திருமுருகாற்றுப் படையில் வரும் குன்று தோருடல் என்னும் தலமாகக் கருதப்படுவனவற்றில் இதுவும் ஒன்று. 'வரை இடங்களில் சிறந்தது இத்தணிகைமால் வரையே' எனக் கச்சியப்ப சிவாசாரியர் பாடிய கந்தபுராணம் கூறுகின்றது. முருகப் பெருமான், சூரபதுமன் முதலிய அசுரர்களுடனும், நம்பிராஜன் முதலிய வேடர்களுடனும் போர் முடித்துச் சினம் தணிந்து அமர்ந்த இடமாதலால், இத்தலம் தணிகை எனப் பெயர் பெற்றது. சண்டைக்குப் பின் வந்து தங்கிய தனால், செருத்தணி என்றும் இதற்குப் பெயர் வழங்கும். அடிவாரத்திலிருந்துமலை உச்சியை அடைய365படிகள் ஏறுதல் வேண்டும். ஓர் ஆண்டுக்கு 365 நாட்கள் என்பதனை இப்படிகள் குறிக்கின்றன. கோயில் வாயிலின் தென்புறம், ''பிரசன்ன காதர் ஈசுவரர்'' சந்நிதி இருக்கின்றது. காதர் என்ற நவாபு ஒருவன் தன் துன்பம் தீரப் பெற்றதனால், இங்கு இலிங்கப் பிரதிஷ்டை செய்து, வாத்திய மண்டபத்தையும் கட்டி வைத்ததாகப் பெரியோர்கள் கூறுகின்றனர்கள். இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்கு இஃது ஒரு நல்ல சான்றாகும். இங்குள்ள விநாயகர், ஆபத்சகாயர் எனப் பெயர் பெறுவார். வள்ளியம்மையை முருகன் மணப்பதற்குத் தக்க நேரத்தில் சகாயம் செய்தவர் ஆதலின் இப்பெயர் அமைந்தது. இங்குள்ள முருகப் பெருமான் ஞான சத்திதரர் என்னும் திருவுருவம் கொண்டவர் ஆவர். பெருமாள் கோயில்களில் சடகோபன் சாதிப்பது போல், இக்கோயிலில் முருகன் திருவடி அடியார்களின் தலைமீது வைக்கப்படுகிறது. கி. பி. 15-ஆம் நூற்றாண்டில் அருணகிரி நாதர், 'திருப்புகழ் ஓதும் கருத்தினர் சேரும் திருத்தணி மேவும் பெருமாளே' எனப் பாடியதற்கு ஏற்ப, ஆண்டுதோறும் சனவரி முதல் தேதியில் பல்லாயிரக் கணக்கான அடியார்கள் திருப்புகழ் பாடிக் கொண்டு மலையேறி முருகனை வணங்கி மகிழ்கின்றனர். திருநாவுக்கரசர், திருப்புறம்பயம் திருத்தாண்டகத்தில் 'கல்மலிந்தோங்கு கழுநீர்க் குன்றம்' என்று பாடியிருப்பது இத்தலத்தைக் குறிப்பதாகலாம் என அறிஞர் கருதுவர். அங்ஙனமாயின் இத்தலம் 1300 ஆண்டுகட்கு முன்பே பழமையும் பெருமையும் வாய்ந்ததாக விளங்கி யிருத்தல் வேண்டும் என உணரலாம். இங்கு வீரட்டானேசுவரர் என்னும் சிவபிரானின் கோயிலும் உள்ளது. அக்கோயிலை நம்பியப்பி என்பவன் கட்டுவித்தான். அவனது செயலைப் பாராட்டி அபராசிதவர்ம பல்லவன் (கி. பி. 875-893) என்னும் அரசன்,

> திருந்து திருத்தணியிற் செஞ்சடைஈ சற்குக்
> கருங்கலாற் கற்றளியா நிற்க—விரும்பியே
> நற்கலைகள் எல்லாம் நவின்றசீர் நம்பியப்பி
> பொற்பமையச் செய்தான் புரிந்து

எனப் பாராட்டிப் பாடிய வெண்பா ஒன்று' இக்கோயிற் கல்வெட்டில் காணப்படுகின்றது. இங்கு ஆறுமுக சுவாமி, விஜயராகவப் பெருமாள், சப்த கன்னிகையர் கோயில்களும் உள்ளன. முதலாம் பராந்தக சோழன் (கி. பி. 907-953) காலத்துக் கல்வெட்டு ஒன்றில், 'குன்றின் மேலுள்ள சுப்பிரமணிய பிள்ளையார் கோயில்' என்னும் சொற்றொடர் காணப்படுவதனால், இக்கோயில் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே மிகவும் புகழ் வாய்ந்து விளங்கியமை தெரிகின்றது. சிவஞான சுவாமிகளின் மாணவராகிய கச்சியப்ப முனிவர், இதற்குத் தல புராணம் முதலியன பாடியுள்ளார். வடலூர் இராமலிங்க அடிகள் இத்தலத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர். திருத்தணிகை முருகப் பெருமானே அவருக்கு உபாசனா மூர்த்தியாக அமைந்து அருள் வழங்கினார் என்பது வரலாறு. திருவருட்பாவில் திருத்தணிகை பற்றிய பதிகங்கள் பற்பல உள்ளன. அருணகிரி நாதர் 83 திருப்புகழ்ப் பாடல்கள், இத்தலத்திற்கு அருளிச் செய்துள்ளார்.

20. திருவாலங்காடு :

இது சென்னை—அரக்கோணம் இருப்புப் பாதையில் ஒரு நிலையம். அந் நிலையத்

தினின்று வடகிழக்கே 3 கல் தொலேவில் கோயில் உள்ளது. சிவபெருமானுக்குரிய சபைகள் ஐந்து என்பர். அவற்றுள் கனக சபை சிதம்பரம், இரசிதசபை மதுரை, தாமிர சபை திருநெல்வேலி, சித்திர சபை திருக்குற்ருலம், இரத்தின சபை திருவாலங் காடு. சிவபெருமான் ஊர்த்துவ தாண்டவம் ஆடிக் காளியைத் தோல்வியுறச் செய்த தலம். 'ஆடினுர் காளி காண ஆலங்காட்டு அடிகளாரே' என்பது தேவாரம். பதஞ்சலி முனிவர் கார்க்கோடகன் என்ற பெயருட னும், வியாக்கிரபாதர் முஞ்சிகேசர் என்ற பெயருடனும், இங்கு இறைவனின் திரு நடன தரிசனத்தை இடையருது செய்து கொண்டிருப்பர். கயிலேக்குத் தலேயாலே நடந்து சென்ற காரைக்கால் அம்மையார்,

இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்ருர்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னே என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க என்ருர்

எனச் சேக்கிழார் பாடுதல் போல, இங்கு இறைவனின் திருவடிக்கீழ் அமர்ந்து, என் றும் ஆனந்த தாண்டவ தரிசனம் செய்து கொண்டிருக்கின்ருர். காரைக்கால் அம் மையார் தலேயால் நடந்து அடைந்த தலம் என்று கருதித் திருஞான சம்பந்தர், இத் தலத்தை மிதித்தற்கு அஞ்சி அருகே ஒரு செழும்பதியில் தங்கினுர். இறைவன் அவர்தம் கனவில் தோன்றி 'எம்மைப் பாட மறந்தனேயோ' என வினவினுர். உடனே இரவில் விழித்தெழுந்த திருஞான சம்பந் தர் 'துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும்' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடினுர். அதன்கண் பழையனூர் நீலி கதையையும், பழையனூர் வேளாளர்கள் எழுபதின்மரும் தாம் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற உயிர் துறந்த வரலாற்றையும், குறிப்பிட் டுள்ளார்.

வஞ்சப் படுத்தொருத்தி வாழ்நாள் கொள்ளும் வகைகேட்டு
அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளாரே

என வரும் அப்பாடற் பகுதி நாம் அறிந்து மகிழ்தற்குரியது. இங்குள்ள சுவாமி பெயர் தேவர் சிங்கப் பெருமான். 'சித்தா சித் தித் திறம் காட்டும் சிவனே தேவர் சிங் கமே அத்தா ஆலங்காடா' என்பது சுந் தரர் தேவாரம். இங்குள்ள நடராசப் பெரு மானேக் கல் வெட்டுக்கள் 'திருவரங்கில் அண்டமுற நிமிர்ந்தருளிய நாயனுர்' எனக் குறிப்பிடுகின்றன. காரைக்கால் அம்மையார் தமது மூத்த திருப்பதிகத்தில் 'அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பன் இடம் திருவாலங்காடே' எனப் பாடியிருத் தல் காணலாம். இங்குள்ள அம்பிகைக்கு வண்டார் குழலி என்பது பெயர். 'வண் டார் குழலி உமை நங்கை பங்கா கங்கை மணவாளா' என்பது சுந்தரர் திருமொழி. இதனே வடமொழியில் பிரமராம்பாள் என் பர். தீர்த்தம் முத்தி தீர்த்தம். தல விருட் சம் ஆலமரம். 'திருவாலங்காட்டுச் செப் பேடுகள்' என்பன தமிழக வரலாற்று ஆராய்ச்சித் துறையில் மிகவும் புகழ் பெற் றவை.

21. திருப்பாசூர் :

இத்தலம் சென்னேக்கு மேற்கே 26 கல் தொலேவில் உள்ள திருவள்ளூருக்கு வட மேற்கே 4 கல் தொலேவில் உள்ளது. இங்குச் சிவபெருமான் பாசு என்னும் மூங் கிலினின்று தோன்றியருளியதாக ஐதிகம். அதனுல் அதற்குப் பாசூர் (பாசு + ஊர்) எனப் பெயர் அமைந்தது. கரிகால் சோழன் மீது, குறும்பர் என்னும் சிற்றர சர்களுக்குத் துணேயாகச் சிலர் வஞ்சகமாக ஏவிய பாம்பை, சிவபெருமான் எழுந்தரு ளித் தடுத்து ஆட்டினுர் என்பது தல வர லாறு. 'பட அரவு ஒன்றது ஆட்டிப் பாசூர் மேய பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே' என்னும் திருத்தாண்டகப் பகுதி இவ்வரலாற்றைக் குறிப்பிடுகின்றது. சந் திரன் பூசித்து அருள் பெற்ற தலம். சம் பந்தர், அப்பர் பாடல். இங்குள்ள கல் வெட்டுக்களில 'தொண்டை மண்டலத்து ஈக்காட்டுக் கோட்டத்துக் காக்கலூர் நாட் டுத் திருப்பாசூர்' என்று இத்தலம் குறிப் பிடப் படுகிறது. இராஜராஜன், குலோத் துங்கன், வீர கம்பணன் ஆகியோர் காலத் துக் கல்வெட்டுக்கள் இங்கு உள்ளன. இக் கோயிலில் விநாயகர் திருவுருவங்கள் பல, தொகுத்து அமைக்கப்பட்டுள்ளன. அம் பிகையின் பெயர் தம்காதலியம்மை. "தங் காதலியும் தாமும் வாழும் ஊர்போலும் பைங்கான் முல்லே பல் அரும்பு ஈனும்

பாசூரே'' என்பது சம்பந்தர் தேவாரம். பசுபதி நாயகி என்றும் அம்மைக்குப் பெயர் வழங்கும்.

22. திருவெண்பாக்கம் :

இது தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற சிவத் தலங்களுள் ஒன்று. திருவள்ளூர் இருப்புப் பாதை நிலையத்துக்கு ஏழு கல் தொலைவில் உள்ளது. சங்கிலி நாச்சியாருக்குச் செய்து கொடுத்த சூளுரை தவறித் திருவொற்றியூர் எல்லை கடந்து சென்றதனால், கண்ணிழந்த சுந்தரர், இங்கு வந்து இறைவனை வழிபட்டுப் ''பிழையுள்ளன பொறுத்திடுவர் என்று அடியேன் பிழைத்தக்கால், பழியதனைப் பாராதே படலம் என்கண் மறைப்பித்தாய்! குழை விரவு வடிகாதா! கோயில் உளாயோ?'' என மனம் நொந்து வினவினர். அதற்கு இறைவன் 'உளோம்போகீர்' எனச் சிறிது துனி தோன்ற அயலார் போலக் கூறி, கண் மறைந்த அவருக்கு ஊன்றுகோல் ஒன்றை வீசி யருளினர்.

மான்திகழும் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்
லாம்
தோன்ற அளித்தாய் என்றுரைக்க, உலகமெல்லாம்
ஈன்றவனே வெண்கோயில் இங்கிருந்தா யோ ?
என்ன
ஊன்றுவதோர் கோல்அருளி உளோம்போகீர்
என்றானே

என்பது சுந்தரர் தேவாரம். ஊன்றுகோல் அளித்ததனால் சுவாமிக்கு 'ஊன்றீசுவரர்' எனப் பெயர் அமைந்தது. இறைவன் வீசிய ஊன்றுகோல் பட்டதனால், இங்குள்ள நந்தியின் வலக் கொம்பு சிறிதளவு ஒடிந்திருத்தல் காணலாம். நந்திதேவர்க்கு அருகில் சுந்தரரின் சிலை, ஊன்றுகோலுடன் அமைந்துள்ளது. கண் பார்வை மறைந்த சுந்தரர்க்கு, அவர் காஞ்சிபுரம் போய்ச் சேரும் வரையில் அம்பிகை மின்னல் ஒளி போலத் தோன்றி வழிகாட்டிக் கொண்டு சென்றதனால், அம்பிகைக்கு மின்னல் ஒளியம்மை என்பது பெயர். 'உளோம் போகீர்' என்பது மருவி, 'உளம் பூதூர்' என்பது இத்தலத்தின் பெயராக, மக்களால் இந்நாளில் வழங்கப்பட்டு வருகின்றது. பூண்டி நீர்த்தேக்கம் காரணமாக, இத்தலத்துக் கோயில் இடம் பெயர்த்து வைக்கப்பட வேண்டியதாயிற்று. சுந்தரர் 'கோயில் உளாயோ?' என மனம் நொந்து வினவியதின் விளைவாகவே, ''ஈசன் அடியார் இதயம் கலங்கிடத் தேசமும் நாடும் சிறப்பும் அழிந்திடும்'' எனத் திருமூலர் திருமந்திரம் கூறுவதன் உண்மையினை உலகுக்குஉணர்த்தும் முறையில், இக்கோயிலுக்கு இந்நிலை நேர்ந்தது போலும் எனச் சான்றோர்கள் கருதுவர். தல விருட்சம் இலந்தை மரம்.

மனிதன் ஒருவன் எய்துதற்காம்
வாழ்வின் இன்பம் பலவற்றுள்,
புனித நமது பாரதத்திற்
பொலியும் சைவ வைணவமாம்
இனிய தலங்கள், கண்டுதொழும்
இன்பிற் சிறந்த தொன்றில்லை !
நனிநன் றுயர்ந்த அப்பேற்றை
நலமே அடைய முயன்றுய்வோம் !

—ஆசிரியர்.

---

சிற்பம் ஓவம் இசைநடனம் சிறப்பே மிக்க பிறகலைகள்
பொற்பத் தழைத்தே ஆங்காங்கும் புதுமை புனிதம் பேரழகு
பற்பல நலங்கள் விளங்கநின்று பண்டைத் தமிழர் பண்பாட்டின்
வெற்றித் தூணும் கோயில்பல, மேவிக் காண்டல் வியன்சிறப்பாம்

—ஆசிரியர்.

# கும்பகோணத்திற் கோயில்கள்

**முன்னுரை :**

தமிழகத்தின் பழம் பெரு நகரங்களுள் ஒன்று, கும்பகோணம். அது சங்க காலம் முதலே புகழ் பெற்றுச் சிறந்து விளங்கியது என்பது,

> “அழும்பில் அன்ன அருஅ யாணர்
> பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவைப்
> பொங்கடி படிகயம் மண்டிய பசுமிளைத்
> தண்குட வாயில்”

எனவரும் அகநானூற்றுப் பாடல் (44) வரிகளிற் புலனுகின்றது. பல்லவரும் (கி.பி.) 300 - 900), சோழரும் (கி. பி, 900 - 1300), நாயக்க மன்னர்களும் (1600-1700) ஆகியோர் பலர், கும்பகோண நகரத்தின் வளர்ச்சிக்கும் சிறப்பிற்கும் பெரும்பணி ஆற்றியுள்ளனர்.

“ கோயில்கள் நிறைந்தது கும்பகோணம் ” என் ஒரு பழமொழியுண்டு. அதன்படி இங்நகரத்திற் பல கோயில்கள் எழிலுற அமைந்து விளங்குகின்றன. இதனைச் சூழ்ந்தும், அணித்தாகவும் பற்பல கோயில்கள் உள்ளன. அவைகளைப் பற்றிய சில குறிப்புக்களை இங்கே காண்போம் :—

**சிவபெருமான் கோயில்கள் :**

(1) கும்பேசுவரர் கோயில்: இது கும்பகோணம் நகரத்தின் நடுவே அமைந்துள்ளது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இதனைப் பாடியுள்ளனர். இக்கோயிலின் நீளம் 750 அடி; அகலம் 250 அடி; மொத்தப்பரப்பு 1,87,500சதுர அடி என்பர். இதன் முதன்மையான கோபுரம் 128 அடி உயரமுடையது. அதன்கண் அழகிய பல சிறந்த சிற்பங்கள், நுட்பமாக அமைக்கப் பெற்றுள்ளன. இது நான்கு பிராகாரங்கள் கொண்டது. விநாயகர், முருகர், பிட்சாடனர், சப்தகன்னியர், திருமகள், ஆகியோரின் சந்நிதிகள், பிராகாரங்களில் அமைந்துள்ளன. ‘நவராத்திரி மண்டபம்’ என்னும் இடத்தில், ஒரே பெருங்கருங் கல்லில் 27 நட்சத்திரங்களும், 12 ராசிகளும் அழகுறச் செதுக்கப்பட்டுள்ளன. கருங்கல்லில் செய்யப்பட்டுள்ள அற்புதமான பழமைமிக்க நாகசுரங்கள் இரண்டு, இக்கோயிலில் உள்ளன. அமுத கும்பமே இலிங்கமாக அமைய, இங்கு இறைவன் எழுந்தருளி இருத்தலின், அமுதகும்பசேர் என்பது இங்குள்ள இறைவனுக்குப் பெயர். எல்லா உயிர்களுக்கும் தாயாக விளங்கி, எல்லா மங்களங்களையும் உண்டாக்கி வருதலின், இங்குள்ள அம்பிகைக்கு மங்களாம்பிகை என்பது பெயர். தலமரம் வன்னி.

(2) நாகேசுவரர் கோயில்: இதனைக் ‘குடந்தைக் கீழ்க்கோட்டம்’ எனத் திருநாவுக்கரசர் குறிப்பிட்டுள்ளார். இத்தலத்தில் இறைவனை ஆதிசேடன் பூசித்துப் பேறுபெற்றதனுல், இங்குள்ள இறைவன் நாகேசுவரர் என வழங்கப்படுகின்ருர். இத்தலத்தைச் சூரியனும் வழிபட்டுப் போற்றியுள்ளான். அதன் அடையாளமாக, இப்பொழுதும் சித்திரை மாதம் 11, 12, 13 தேதிகளில் சூரியனின் ஒளி, இவ்விலிங்கத்தின்மீது படிதலைக் காணலாம். இதனைச் சூரியன், இறைவனுக்குச் செய்யும் வழிபாட்டு நிகழ்ச்சியின் அறிகுறியாகப் பெரியோர்கள் கூறுவர். இங்ஙனம் மேற்குறிப்

பிட்ட நாட்களில் சூரியனின் ஒளி கருவறையில் உள்ள திருவுருவின்மீது படியும்படி, கோயில் அமைக்கப்பட்டுள்ள முறை மிகவும் வியக்கத்தக்கது. இக்கோயிலில் உள்ள முருகனின் திருமுன்னர் அமைந்துள்ள அர்த்தநாரீஸ்வரர் வடிவமும், பிட்சாடனர் வடிவமும், கலைத்திறனும் கவினும் மிக்கவை.

(3) மடந்தைபாகர் கோயில்: இது நாகேசுவர சுவாமி கோயிலின் உள்ளேயுள்ள, கூத்தப்பெருமானின் கோயிலாகும். இது மிகவும் பழமையானது. "குடந்தைக்கீழ்க் கோட்டத்து எம் கூத்தனுர்" எனத் திருநாவுக்கரசர் இங்குள்ள கூத்தப்பெருமானைக் குறிப்பிட்டுள்ளார். இது தேர் வடிவத்தில் அமைந்துள்ளது. யானைகள் முயன்று இழுப்பதுபோல, இக்கோயில் சிறந்தமுறையில் அமைக்கப்பெற்றுள்ளது. சுவாமி நாகேசுவரர், மடந்தைபாகர்; அம்பிகை பெரியநாயகி.

(4) காரோணேசர் கோயில்: இது காசி விஸ்வநாதர் கோயில் எனவும் வழங்கப்படும். மகாமகத்தீர்த்தத்திற்கு வடகிழக்குப் பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளது. இங்குள்ள இறைவனே, கங்கை முதலிய நதி தேவதைகளைக் காசியினின்று அழைத்து வந்து, மகாமகத் தீர்த்தத்தில் மூழ்கச்செய்து உய்வித்தருளினுர் என்பது தலவரலாறு. இராவணனை அழித்தற் பொருட்டுத் திருமாலுக்குத் தனது ஆற்றலின் ஒரு கூற்றைக் கொடுத்தருளினமையால், காயாரோகணர் என இங்குள்ள இறைவனுக்குப் பெயர் அமைந்தது. காயாரோகணம் என்பதே காரோணம் என வழங்குகின்றது. சுவாமி காசிவிஸ்வநாதர், சோமநாதர்; அம்பிகை விசாலாட்சி, தேனுர் மொழியம்மை.

(5) சோமேசர் கோயில்: இங்கு இறைவனைச் சோமன் (சந்திரன்) வழிபட்டுப் பேறு பெற்றுன். ஆதலின் இது சோமேசர் கோயில் எனப் பெயர் பெற்றது. இங்கு வியாழன் என்னும் பிருகற்பதியும் வழிபட்டு அருள் பெற்றுர். ஆதலின் வியாழச் சோமேசர் எனவும் பெயர் வழங்கும். வியாழச் சோமேசர் என்பதனையே, பாமர மக்கள் பொருளறியாமையால் 'ஏழைச் சோமேசர்' என வழங்கி வருகின்றனர். வியாழனது திருவுருவம் இககோயிலில் அமைக்கப்பட்டுள்ளது. பிரமதேவனின் அமுதகும்பம் வைக்கப்பெற்றிருந்த உறி (சிக்கம்), இறைவன் எய்த அம்பினுல் அறுபட்டு விழுந்த இடமாதலின், இக்கோயில் சிக்கேசம் எனவும் வழங்கப்படும்.

(6) நாளிகேரேசர் கோயில்: மகாமகக் குளத்திற்குக் கிழக்குப் பக்கத்தில் இக்கோயில் உள்ளது. அபிமுகேசர் கோயில் எனவும் வழங்கும். அமுதகும்பத்தின் வாயின்மேல் வைக்கப்பெற்றிருந்த நாளிகேரம் (தேங்காய்) விழுந்த இடமாதலின், நாளிகேரேசர் கோயில் எனப் பெயர் பெற்றது. கங்கை முதலிய நதி தேவதைகள் மகாமகத் தீர்த்தத்தில் நீராட வந்தபொழுது, அபிமுகமாக (மேற்குத் திசையாக) இறைவன் இங்குக் காட்சி தந்தருளியதனுல், அபிமுகேசர் கோயில் எனவும் இது பெயர் பெற்றது. சுவாமி நாளிகேரேசர், (அபிமுகேசர்); அம்பிகை அமுதவல்லி.

(7) யக்ஞோபவீதேசர் கோயில்: இது மகாமகக் குளத்திற்கு மேற்கு மூலையில் அமைந்திருக்கின்றது. அமுத குடத்தின் மீது இருந்த யக்ஞஉபவீதம் (பூணல் நூல்) விழுந்த இடத்தில் தோன்றியதனுல், இங்கு இறைவன் இப்பெயர் பெற்றுன். கௌதமர் இங்குப் பூசித்துப் பேறு பெற்றுர். ஆதலின், இக்கோயில் கௌதமேசர் கோயில் என்றும் வழங்கப்பெறும்.

(8) பாணபுரேசம்: இறைவன் வேடனின் வடிவத்தில் வந்து அமுதகும்பத்தினை நோக்கித் தமது வில்லிற் பூட்டிய பாணத்தினை எய்த இடம் ஆதலின் பாணபுரம் எனப்பெயர் பெற்றது. பாணபுரத்திலுள்ள ஈசர் பாணபுரேசர் என வழங்கப்படுகின்றுர். பாணபுரம் என்பது பாணதுறை என்ருகி, அதுவே பின்னர் வாணுதுறை என மருவி வழங்குகின்றது. முன்னெரு காலத்தில் திருவருள் உணர்ச்சியின்றித் திரிபு உணர்ச்சியால் வியாச முனிவர் பொருளல்லவற்றைப் பொருளென்று கூறிய குற்றம் நீங்கப் பூசித்த தலம் இது.

**(9) மாலதி வனேசர் கோயில் :** மாலதி வனம்(குருக்கத்தி மலர்க்காடு)ஆக, இருந்த இடத்தில் அமைந்த கோயில். ஆதலின், இங்குள்ள இறைவன் மாலதி வனேசர் எனப் பெயர் பெற்ருர். இக்காலத்தில் இது 'கம்பட்ட விசுவநாதர் ஆலயம்' என வழங்குகிறது. தஞ்சை அரசர்களின் ஆட்சிக் காலத்தில் பொற்காசுகள் அடிக்கும் கம்பட்டம் (Mint) இவ்விடத்தில் அமைந்திருந்தது. ஆதலின் இக்கோயிலிலுள்ள விசுவநாதர், கம்பட்ட விசுவநாதர் என வழங்கப்படுவாராயினர். இதனுடைய சின்னங்களை இப்போதும், இக்கோயிலின் வடகிழக்கு மூலையில் காணலாம்.

**(10) கயிலாயநாதர் கோயில் :** காவிரியாற்றின் வடகரையில் உள்ள மேலைக் காவிரியில் இக்கோயில் அமைந்துள்ளது. பிப்பிலாதர் என்ற முனிவருக்கு இறைவன் இங்குக் கயிலாயக் காட்சியைக் காணும் பேற்றை அருள் புரிந்ததனுல், இங்குள்ள இறைவன் கயிலாயநாதர் என வழங்கப் படுகின்ருர்:–

**திருமால் கோயில்கள் :**

மேற்குறித்த 10 தலங்களும், கும்பகோணத்திலுள்ள பழம்பெரும் சிவாலயங்களாகும். இவைகளேயன்றி, இங்குப்பல திருமால் கோயில்களும் உள்ளன. அவற்றுள் மிகவும் முதன்மையானவை பின்வருமாறு.

**(1) சாரங்கபாணி கோயில் :** கும்பகோணத்திலுள்ள திருமால் கோயில்களுள், மிகவும் பழமையும் பெருமையும் வாய்ந்தது இக்கோயிலேயாகும்.

> "ஆரா அமுதே அடியேன் உடலம்
> நின்பால் அன்பாலே
> நீராய் அலைந்து கரைய உருக்கு
> கின்ற நெடுமாலே..."

என நம்மாழ்வார் புகழ்ந்து பாடியதனுல், இங்குள்ள இறைவனுக்கு ஆராவமுதன் எனப் பெயர் வழங்கப்படும். ஆதலின் இதனை "ஆராவமுதன்தளி" எனவும் கூறுவர். இக்கோயில் பல்லவர் காலத்தது. நாயக்க மன்னர்கள் இதற்குத் திருப்பணிகள் செய்தனர். இதன் கோபுரம் 146 அடி உயரமுள்ளது, 12 நிலைகளை உடையது. திருவரங்கம் கோயிலைப்போல, இதுவும் காவிரி, அரிசில் என்னும் இருபெரும் ஆறுகளுக்கிடையே அமைந்துள்ளது. இக்கோயிலுக்குத் தட்சிணாயனவாயில் என்றும், உத்தராயணவாயில் என்றும், இரண்டு வாயில்கள் உள்ளன. ஏமமகரிஷிக்கு மகளாக அவதரித்த மகாலட்சுமியைச் சாரங்கபாணிப் பெருமாள், இங்கு மணந்துகொண்டார். ஆதலின் கல்யாணபுரம் என்றும் இத்தலத்திற்கு ஒரு பெயர் உண்டு. சூரியனும் இங்கு வழிபட்டு அருள் பெற்ருன். இக்கோயிலின் நடுப் பகுதியானது, குதிரைகளும் யானைகளும் பூட்டிய சக்கரங்களையுடைய ஒரு தேர் போல, அமைந்துள்ளது. பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியவர்கள், இக்கோயிலை மங்களாசாசனம் செய்திருக்கின்றனர். இக்கோயிலில் உள்ள பாதாள ஸ்ரீநிவாசர் சந்நிதி மிகவும் சிறப்புடையது. திருப்பதியில் உள்ள வேங்கடேசுவரப் பெருமாளே இங்கு எழுந்தருளி வந்திருப்பதாக ஐதிகம்.

**(2) சக்கரபாணி கோயில்:** இது சுதர்சனர்தளி எனவும் வழங்கப்பெறும். ஒரு காலத்தில் சலந்தரன் என்னும் அசுரனைக் கொன்ற சக்கராயுதம், காவிரியாற்றில் புதைந்திருந்தது. அதனை எம்பெருமான் எடுத்துத் தமது திருக்கரத்தில் தரித்துக் கொண்ட தலம் இது. சூரியனது செருக்கை அடக்குவதற்காகப் பெருமாள் சக்கரவடிவம் கொண்டு இங்கு எழுந்தருளியுள்ளார் என்பது வரலாறு.

**(3) வரதராசப்பெருமாள் கோயில்:** காவிரிப் புதுப்பாலத்தின் வடகோடியில் மேற்கு முகமாக விளங்கும் தலம். மதங்க முனிவர் வேண்டிக்கொண்டபடி காஞ்சிபுரம் வரதராசப்பெருமாள் இங்கு வந்து தங்கிக் கோயில் கொண்டுள்ளார் எனப் பெரியோர்கள் கூறுவர்.

**(4) இராமசாமி கோயில்:** கும்பகோணத்தின் மேற்குப் பகுதியில், ஐயன்கடை

எனப்படும் கடைத்தெருவின் தெற்கு மூலையில், இஃது அமைந்திருக்கின்றது. இராமாயண வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட அழகிய பல சிற்பங்கள், இக்கோயிலில் நிறைந்துள்ளன. தஞ்சாவூரை ஆண்ட மன்னர்களான அச்சுதப்ப நாயக்கர் (1572—1614), இரகுநாத நாயக்கர் (1614—1640) என்பவர்களின் காலத்தில் இக்கோயில் கட்டப்பெற்றது.

இவைகளேயன்றிக் காளத்தீசுவரர், வீரபத்திரர், உச்சிப்பிள்ளையார், குமாரர், பழனியாண்டவர், கோபாலர், பிரமன், முதலிய மற்றும் பலருக்குரிய கோயில்களும் கும்பகோணத்தில் உள்ளன.

**பஞ்சக் குரோசத் தலங்கள்:**

கும்பகோணத்தைச் சுற்றிப் பற்பல கோயில்கள் உள்ளன. அவைகளுள் மிகவும் முக்கியமானவை, "பஞ்சக்குரோசத் தலங்கள்" என்பனவாகும். குரோசம் என்பது கூப்பிடு தூரம் சுமார் 2 கல் என்பர். கும்பகோணத்திற்கு அருகே அதனைச் சார்ந்து ஒரு குரோசம் தொலைவிற்குள் உள்ள 5 கோயில்களே, "பஞ்சக் குரோசத் தலங்கள்" எனப்படும். அவை வருமாறு:-

(1) **திருவிடை மருதூர்**:- கும்பகோணத்திற்கு நேர் கிழக்கே 5 கல் தொலைவில் உள்ளது. தேவர்களும், விபண்டமுனிவரும் பூசித்தது. வரகுணபாண்டியர், பட்டினத்தார், பத்திரகிரியார் முதலியோர் வழிபட்டது. சுவாமி மருதவாணர், மகாலிங்கம்; அம்பிகை நன்முலை நாயகி.

(2) **திருநாகேச்சுரம்**: கும்பகோணத்திற்குத் தென் கிழக்கே $2\frac{1}{2}$ கல் தொலைவில் உள்ளது. ஆதிசேடன் ஆகிய நாகம் பூசித்தது. பெரிய புராணம் பாடிய சேக்கிழார் பெருமான், பெரிதும் விரும்பிப் போற்றி வாழ்ந்திருந்த தலம். இறைவன் நாகேசுவரர்; இறைவி குன்றமுலை நாயகி.

(3) **தாராசுரம்**: கும்பகோணத்திற்குத் தென்மேற்கில் உள்ளது. இரண்டாம் இராசராசன் அமைத்தது (1146-1173). பெரிய புராண வரலாறுகள் இங்கு அழகிய சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இங்குள்ள 'இராஜகம்பீரன் திருமண்டபம்' கண்டு மகிழத்தக்கது. தாரன் என்னும் அசுரன் பூசித்ததால் தாராசுரம் எனப் பெயர் அமைந்தது என்பர். ஒட்டக்கூத்தர் தக்கயாகப்பரணி பாடியபோது, அவருக்குத் தீபம் ஏந்தி ஒளிகாட்டிய காளிதேவியின் சந்நிதி, இக்கோயிலில் உள்ளது. இங்குள்ள அன்னபூரணி சிலை மிகவும் அழகு வாய்ந்தது.

(4) **சுவாமிமலை**: இதுகும்பகோணத்திற்கு மேற்கே 2 கல் தொலைவில் உள்ளது. முருகனின் ஆறு படைவீடுகளுள், திருவேரகம் என்பது இதுவே என்பர். சிவபெருமானுக்கு முருகன் பிரணவ உபதேசம் புரிந்த தலம். 60 படிகள் கொண்ட அழகிய செய்குன்றின் மீது, சுவாமிநாதன் ஆகிய முருகன் எழுந்தருளியுள்ளார். கோயிலின் கீழ்ப்பகுதியில் மதுரைச் சுந்தரேசுவரரும், மீனாட்சியம்மையும் எழுந்தருளியுள்ளனர்.

**சிறந்த பல தீர்த்தங்கள்:**

கும்பகோணம் ஒரு சிறந்த பெருநகரம் மட்டுமேயன்றி, மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்று சிறப்புக்களும் ஒருங்கே அமைந்த புண்ணிய க்ஷேத்திரமும் ஆகும். இங்குப் புகழ்பெற்ற பழமையான தீர்த்தங்கள் பதினான்கு உள்ளன.

(1) **மகாமகத்தீர்த்தம்**: இது நகருக்கு நடுவே 20 ஏக்கர் நிலப் பரப்பில் அமைந்துள்ளது. இத் தீர்த்தத்தின் கரையில் நாற்றிசைகளிலுமாக 16 மண்டபங்கள், அல்லது சிறு கோயில்கள் அமைந்துள்ளன. அவற்றில் முறையே,

1. பிரம்மதீர்த்த ஈசுவரர்.
2. முகுந்த ஈசுவரர்.
3. தன ஈசுவரர்.
4. இடப ஈசுவரர்.
5. பாண ஈசுவரர்.
6. கோண ஈசுவரர்.
7. பக்திகேசுவரர்.
8. பைரவ ஈசுவரர்.
9. அகத்தீசுவரர்.

10. வியாச ஈசுவரர்.
11. உமாபாகேசுவரர்.
12. நிருதி ஈசுவரர்.
13. பிரம்மேசுவரர்.
14. கங்காதரேசுவரர்.
15. முக்த தீர்த்தேசுவரர்.
16. க்ஷேத்திரபாலேசுரர்.

என்பவர்கள் எழுந்தருளியுள்ளனர். இத் தலத்திற்குப் பெருஞ் சிறப்பையும் புனிதத் தையும் உண்டாக்கிக் கொண்டு திகழ்வது இதுவேயாகும். இதற்குப் பாபநாச தீர்த்தம், கன்னிதீர்த்தம் எனப் பல பெயர்கள் உண்டு. கங்கைமுதலிய புனித நதி தேவதைகள் பலவும், மகாமக நாளில் இதன்கண் நீராடிப் புனிதம் பெறுகின்றன என்பது வரலாறு.

குளத்தின் கிழக்குக்கரையில் நருமதை யும் சரசுவதியும். தென்கிழக்கில் காவிரி யும், தெற்கில் குமரியும், தென்மேற்கில் வேதவதியும், மேற்குக்கரையில் சரயுநதி யும், வடமேற்கில் கங்கையும், வடகரையில் யமுனையும், வடகிழக்கில் கோதாவரியும் ஆகிய 9 புண்ணிய நதிகள் அமைந்திருக் கின்றன. கங்கைநதிக்கு எதிரில் கும்பேசு வரர் வெள்விடையின்மீது பொன் மண்ட பத்தில் எழுந்தருளியிருக்க, பிரமதேவரும் நீராடினர். ஆதலின் பிரமதீர்த்தமும் இதன் வடகரையில் உள்ளது:

(2) வருண தீர்த்தம் : வருண தேவன் அகழ்ந்தது. தூமகேதுநீராடி வரம்பெற்றது. இஃது இப்போது கும்பேசர் பூங்காவாக மாற்றப்பெற்றுள்ளது.

(3) பொற்றாமரைத் தீர்த்தம்: இது சாரங்கபாணி சுவாமி கோயிலில் உள்ளது. ஏமபுஷ்கரிணி எனவும் வழங் கும். 361 அடி நீளமும், 285 அடி அகல மும் உடையது. இலக்குமி தீர்த்தம், அமுதவாணி முதலிய பல பெயர்கள் இதற்கு உண்டு.

(4) சந்திர தீர்த்தம்: வியாழச் சோமேசர் கோயிலின் எதிரில் இருப்பது. சந்திரனால் அமைக்கப்பெற்றது.

(5) கௌதம தீர்த்தம் : கௌதமேசுரர் கோயிலுக்குப் பக்கத்தில் அமைந்திருப் பது. கௌதம முனிவர் நீராடிப் பேறு பெற்றது.

(6) சூரிய தீர்த்தம்: சூரியன் நீராடி அருள் பெற்ற தலம். நாகேசுவரர் கோயி லின் தெற்குக்கோபுர வாயிலுக்கு எதிரில் உள்ளது.

(7) வராக தீர்த்தம் : வராகப் பெரு மாள் கோயிலுக்கு அருகே, கும்பேசர் திருமஞ்சன வீதியில் உள்ளது. இதன் கரையில் 'கரும்பாயிரம் கொண்ட விநாயகர்' கோயில் கொண்டுள்ளார்.

(8) காசிப தீர்த்தம்: காசிப முனிவர் அருள்பெற்றது. இது காவிரியில் உள்ள ஒரு படித்துறை. இக்காலத்தில் 'கும்பேசர் திருமஞ்சனப் படித்துறை' என வழங்கி வருகின்றது.

(9) சக்கர தீர்த்தம் : சலந்தரன் என்னும் அசுரனைக் கொன்ற சக்கரம், அசுரர்களாற் கவர்ந்து கொள்ளப்படாமல் இருப்பதற்காகக், காவிரியாற்றில் பாது காப்பாக மறைத்துவைக்கப் பெற்றிருந்த இடம். இறந்தவர்களின் என்பை இங்குக் கொணர்ந்து விடுதல், ஒரு சிறப்பாகக் கருதப்பெறுகின்றது.

(10) பகவத் தீர்த்தம்: பகவன் என்னும் அந்தணன், கங்கையில் இடு வதற்காகக் கொண்டு சென்ற என்பு, காவிரியாற்றில் இவ்விடத்தில் பூவாக மாறியது என்பது வரலாறு.

(11) மதங்க தீர்த்தம்: காவிரிப் புதுப் பாலத்தின் அருகில் உள்ள ஒரு படித் துறை. மதங்க முனிவர் நீராடி அருள் பெற்றது.

(12) மங்கள கூபம்: கும்பேசர் கோயி லுக்கு வடகிழக்கே, முருகப்பெருமானின் பொருட்டு, மங்களாம்பிகை தனது நகத்தால் உண்டாக்கிய ஒரு கிணறு. இப்போது திருக்குளமாக மாற்றி அமைக் கப்பட்டு விளங்குகின்றது.

**(13)** குர தீர்த்தம்: கும்பேசர் கோயிலில் மங்களாம்பிகையின் சந்நிதிக்கு எதிரேயுள்ள கிணறு. காமதேனுவின் குளம்பால் உண்டாக்கப்பட்ட தீர்த்தம் (குரம்-குளம்பு). இதன் கரையில் வெண்ணைப் பிள்ளையார் கோயில் உள்ளது.

**(14)** அசுவத்த தீர்த்தம்: நாகேசுவரர் கோயிலில் உள்ளது. ஆதிசேடன் நீராடி அருள் பெற்றதனால், நாகதீர்த்தம் எனவும் வழங்கும். (சிங்கக் கிணறு).

முடிவுரை:

கும்பகோணத்தின் பெருமைக்குக் காரணங்கள் பல. அவற்றுள், ஆசாரிய பீடங்கள் பல அங்கு அமைந்திருப்பதும், ஒருகாரணமாகும். இங்குதான், புகழ்பெற்ற காஞ்சிகாமகோடி பீடத்தின் தலைமை நிலையம் அமைந்துள்ளது. வீரசைவப் பெருமக்கள் போற்றும் குருபீடமாய் **வீரசிங்காதனப் பீடம்** என்னும் ஸ்ரீ சாரங்க தேசிகேந்திர சுவாமிகள் அவர்களின் திருமடம், இங்கேயே விளங்குகின்றது. இத்திருமடத்தினை ஒட்டக் கூத்தரும், அருணகிரிநாதரும் புகழ்ந்து போற்றியுள்ளனர். மற்றும் வைஷ்ணவப் பெருஞ் சான்றோர்களான **திருக்குடந்தை தேசிகன்**, திருக்குடந்தை அழகிய சிங்கர், திருக்குடந்தை ஆண்டவன் ஆகியோர் அவதரித்தருளிய திருத்தலமும் இதுவே! மூர்க்க நாயனார், கவிகாளமேகம், மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலிய பெரியோர்கள் பலர் இத்தலத்தில் வாழ்ந்துள்ளனர்!

இத்தகைய பல பெரும் சிறப்புக்களை உடைய கும்பகோணத் தலத்தினை, மகாமக விழாவினை ஒட்டி, நாம் அனைவரும் சென்று கண்டு தரிசித்துப் போற்றி உய்வோமாக.

—ஆசிரியர்.



## 1967-68ம் வருடம் மார்கழி மாதம் திருப்பாவை—திருவெம்பாவை மத்தியக் குழுவின் நிகழ்ச்சி விவரங்கள்

| | | |
|---|---|---|
| 1. | மாநாடுகள் நடந்த இடங்கள் | 214 |
| 2. | பாவைப் புத்தகங்கள் பெற்ற ஆரம்பப் பள்ளிகள் | 4700 |
| 3. | மொத்தம் வழங்கிய பாவைப் புத்தகங்கள் | 3½ லட்சம் பிரதிகள் |
| 4. | பாவைப் பாசுரங்களை மனப்பாடம் செய்த குழந்தைகளுக்கு வழங்கிய ஸ்ரீ அம்பாள் காசுகள் | 26,328 |
| 5. | பாவை விழாக்களில் வழங்க ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் ஸ்ரீமுகம் அனுப்பியது | 15,000 |

# திருவத்யயன உத்ஸவம்

(ஆழ்வார் திருநகரி)

திரு. டி. சுதர்ஸன ராமாநுஜ அய்யங்கார், M.A.L.T.

(முற்றொடர்ச்சி)

ஆறும் உத்ஸவம் ஆழ்வார் மாட வீதி எழுந்தருளியதும், சுக்ரவாரத் தாயார் இருவரும், சேனை முதலிகளுடன் ஆற்றங்கரைக்கு எழுந்தருளித் தீர்த்தவாரி ஆகிக் கனுப்பிடி வைத்து, உடையவர் ஸந்நிதிக்கு எழுந்தருளிக் கோஷ்டி ஆனதும் ஆழ்வார் ஸந்நிதிக்கு எழுந்தருளுவார்கள். அன்று பொன்னங்குறட்டில் இரண்டு தாயார்களையும் சாத்திக் கீழே கட்டில் சமர்ப்பித்து ஆழ்வாரும், எதிராகக் கட்டில் சமர்ப்பித்து உடையவரும் எழுந்தருளித் தளிகை அமுது செய்து கோஷ்டி நடக்கும். (கனு திருவத்யயன உத்ஸவத்தில் வருவதால் உடையவரும் எழுந்தருளியிருப்பர்). இராத்திரி திருமுடி சேவைக்கு முன்னதாக ஆழ்வாருக்கு ஊஞ்சல் உத்ஸவம் நடக்கும். வியாக்கியானம் "உலகமுண்ட பெருவாயா". ஏழாவது உத்ஸவத்தன்றைக்கு கனுப் பார்வேட்டை நடக்க வேண்டியது. உத்ஸவமாகையால் உத்ஸவம் முடிந்தவன்று நடக்கும். வியாக்கியானம் "கங்குலும் பகலும்". எட்டாவது உத்ஸவம் சாயங்காலம் கொட்டகையிலிருந்து குதிரை வாகனத்தடிக்குப் பெருமாளும், திருமங்கை மன்னனும் எழுந்தருளுவர். இயல் கிடையாது. பெருமாள் குதிரை வாகனத்தில் சாத்திப் பிரதக்ஷிணமாக வடக்கு மாட வீதிக்கு எழுந்தருளுவர். திருமங்கை மன்னர் அப்ரதக்ஷிணமாக வடக்கு மாட வீதிக்கு எழுந்தருளி மாட வீதியில் திருவேடுபறி உத்ஸவம் நடக்கும். திருவேடுபறி உத்ஸவம் முடிந்ததும் பெருமாள் பட்சிராஜர் சந்நிதிக்கு அருகில் தெற்கு நோக்கியும், கோபுர வாசலில் திருமங்கை ஆழ்வார் வடக்கு நோக்கியும் எழுந்தருளி யிருப்பர். அரையருக்கு அருளிப்பாடிட்டு, அடிசோதிக்க எழுந்தருளி அரையர் பெருமாளண்டை வந்து "ஸ்வாமி நாயந்தே!" மார்கழித் திருக்கல்யாணத்தின் எட்டாம் நாள் நம்பிரான் மேல் கொண்டு காட்டை நாடித் தேனுகனும், களிறும், புள்ளும் உடன் மடிய என்கிற படியே வேட்டையாடி வருமளவில் தேவரீர் பண்டு பண்டாரங்களெல்லாம் சதிர் கள்ளராலே பறி போகப்பட்டதனாலேயும், அடியோங்களை அடிவழி சோதிக்க நியமித்தருளிய படியினாலும், அடியோங்களும் மேல் திசையில் விடைகொண்டோம். அங்கு ஒன்றும் கண்டோமில்லை. வடதிசையில் விடைகொண்டோம். ஒத்தையடிப் பாடாய்ப் போச்சுது. கீழ்த் திசையில் விடைகொண்டோம். பலபல அடிகளாய்ப் போச்சுது. தென் திசையில் விடைகொண்டோம். அங்கே சில கூட்ட நாட்டமும், ஆரவாரமும், பந்த வெளிச்சமும் கருடத்வஜம், அநுமத்வஜம் முதலான சின்னங்களும் தெரியப்பட்டன. தேவரீர் பரிகரமென்று சமீபத்தில் தடையில்லாதே விடைகொண்டோம். ஆழ்வார் பரிகரமாயிருந்தது. ஆழ்வார் பரிகரத்தார் ஆழ்வார் திருவுள்ளத்தை அறிந்தோ, அறியாமலோ அடியோங்களை அடித்து முடுக்கிவிட்டார்கள். அடியோங்களும் தேவரீர் திருப்படிக்கத் தீர்த்தம் ஸ்வீகரித்த மகிமையினாலே திரும்ப விடை கொண்டோம். வேண்டும் காரியம் திருவுள்ளம் பற்றி அருளப்பாடு சாதித்தருள" என்றதும் கோவில் ஸ்தலத்தார் பறிபோன சாமான்களின் பட்டய வோலை தயார் செய்து சமர்ப்பிக்க, அதை ஒப்புக்கொள்ளாமல் கிழித்து எறிய சரியானபடி வேறொரு பட்டயவோலை தயார் செய்து சமர்ப்பிக்கப் பெருமாளும் அங்கீகரித்து ஆழ்வாரும் அங்கீகரித்து, நம் கலியனைப் பகல் பந்தத்துடன் அழைத்து

வரத் திருவுள்ளமார என்று சாதிக்க, ஆழ்வார் திருமுன்பு அரையர் "வாடினேன் வாடி" பாசுரம் சேவித்து மங்களாசாசனம் ஆகி உள்ளே பெருமாளும், ஆழ்வாரும் எழுந்தருளித் திருவெழு கூற்றிருக்கை சேவித்து ஆழ்வாருக்கும் மரியாதை பண்ணி கோஷ்டிக்கும ஸ்ரீசடகோபம் சாதிப்பார்கள். வாகனத்திலிருந்து படிகளேறிந்ததும் உள்ளே எழுந்தருளும்போது "சிறிய திருமடல்" சேவை நடக்கும். குதிரை வாகனத்தில் சாத்தியிருந்த முத்துக் கொண்டையுடன் அன்று திருமுடி சேவை நடப்பது விசேஷம். வியாக்கியானம் "நெடுமாற் கடிமை". 9–ஆம் உத்ஸவம் காலை பெருமாளுடைய அருகாழி தேடுவதாக ஆழ்வார் குதிரை வாகனத்தில் வேகமாக மாடவீதி எருந்தருளி, கிடையாத பாவனையில் திரும்பவும் மெதுவாக உடையவருடன் சிறிய திருமடல் சேவை நடக்கும். அப்பொழுது அருகாழி கிடைத்ததாகப் பாவனை. வியாக்கியானம் "மாலைநண்ணி".

10-வது உத்ஸவம். விடியற்காலையில் பெருமாள் ஏகாந்தமாக வெளியில் திருப் பல்லக்கில் வாசலிலுள்ள மண்டபத்துக்கு (முன் பாடசாலை இருந்த இடம்) எழுந்தருளுவர். மண்டபம் நன்ருக அலங்கரிக்கப் பட்டு அனேக சுகந்தங்களுடன் பரிமளித்துக் கொண்டிருக்கும். கதவைச் சாத்திக் கொண்டு எல்லோரும் வெளிவந்து விடுவார்கள். திருவனந்தல் காலை கதவு திறந்து அரையர் "ஆராவமுதே" என்ற பாசுரம் சேவித்துக் கோஷ்டி நடக்கும். கோஷ்டியானதும் பெருமாள் எல்லாத் திருவீதிகளுக்கும் அரையர் தாளம், மத்தளத்துடன் ஏகாந்தமாக எழுந்தருளுவர். பெரிய ஸந்நிதி திருக்காப்புச் சேர்ந்திருக்கும். சாயுங்காலம் சுமார் 4 மணிக்குக் கோவிலுக்கு எழுந்தருளிக் கதவைத் தட்டக் கோயிலிலுள்ள நாச்சிமார்கள் கதவு திறக்கச் சம்மதமின்றி இருக்கும் பாவனையில் கதவு திறக்கப்பட மாட்டாது. பெருமாள் உடனே வாத்ய கோஷத்துடன் உடையவர் ஸந்நிதிக்கு எழுந்தருளிக்கோஷ்டி நடந்து திரும்ப பெரிய ஸந்நிதிக்கு எழுந்தருளும்போது கதவு திறக்கப்படும். பெருமாள் உள்ளே எழுந்தருளினதும் தாயார் மூவரும் ஒரே தோளுக்கினியானில்சாத்தி,பெருமாளுக்கு எதிராக எழுந்தருளி யிருப்பர். அரையர் "காதில் கடிப்பிட்டு" "மின்னொத்த நுண்ணிடையாள்", "மின்னிடைமடவார்" என்ற பாசுரங்களுக்கு அபிநயத்தோடு வியாக்கியானம் சேவிப்பர். "பந்தும், கழலும் தந்து போகு நம்பீ" என்று நாச்சிமார்கள் கேட்கிறபடி முதலில் பெருமாளிடமிருந்து ஒரு பந்து கொண்டு நாச்சிமாரிடம் சமர்ப்பிக்க "இது என்னுடைய பந்தன்று, பதினொரு யிரம் கோபால ஸ்திரீகள் அடித்துக் கசக்கின பந்து" என்று அரையர் அதை வீசி எறிந்து விடுவர். அப்புறம் அரையர் வேறொரு நல்ல முத்துப் பந்தைக் கொண்டு சமர்ப்பிக்க அதை நாச்சிமார்கள் ஒப்புக் கொள்வர். பின்னர் அரையர் பெருமாளிடமிருந்து "ஸ்ரீ சடகோபனை" எழுந்தருளப் பண்ணித் தாயாரிடம் சமர்ப்பிப்பர். அதுவும் ஒப்புக் கொள்ளப்படும். பெருமாளும், தாயாரும் பிரணய கலகமாக எழுந்தருளி யிருக்கிருர்கள் என்றுஆழ்வார் சமாதானம் பண்ணப் பல்லக்கில் எழுந்தருளுவர். அரையர் பெருமாளுக்காக "அடியேன் இன்னும் தளர்வேனே" என்றும், நாச்சிமாருக்காக "குருகைப்பிரான் வந்து சந்தித்ததே" என்ற பாசுரமும் சேவித்து "நம்மையும், நம் பெண்டுகளையும் உறவாக்கித் திருவுள்ளமார" என்ற அருளிப்பாடும், "பொலிந்து நின்ற பிரான் செய்த பிழைகளெல்லாம் நம் பெரியனுக்காகப் பொறுத்துக் கொள்ளத் திருவுள்ளமார" என்ற அருளிப்பாடும் நாயந்தே! என்று சொன்னதும் தாயார், "அருளிப்பாடு பொலிந்து நின்றபிரான்" என்று சாதிக்க, பெருமாள் "நாயந்தே! நாயந்தே!" என்று சொல்லிக் கொண்டே வேகமாக உள்ளே எழுந்தருளுவர். ஆழ்வாரும் உடையவரும் பாடசாலைக்கு எழுந்தருளிக் கோஷ்டி நடந்து பெரிய திருமடல் இயலில் சேவிக்க உடையவர் ஸந்நிதிக் கெழுந்தருளி கோஷ்டியானதும், மாடவீதி வழியாக ஆழ்வார் ஸந்நிதிக்கு எழுந்தருளுவார்கள். ஆழ்வாருக்கு இராத்திரி தத்துவப் போர்வைகள் சாத்தப்படும். திருமுடி சேவையானதும் "தாளதாமரை" வியாக்கியானம் ஆகும். ஆழ்வார் போர்வையுடனேயே கொஞ்சம் முன்னதாக மற்றொரு கட்டிலுக்கு எழுந்தருளுவர். பெருமாள் ஆழ்வாரை நோக்கிக் கொஞ்ச தூரத்தில்

எழுந்தருளி ஒரு கட்டிலும், அங்கிருந்து கொஞ்ச தூரம் எழுந்தருளி இன்னொரு கட்டிலுமாக எழுந்தருளி யிருப்பர். ஆக பெருமாள் மூன்ருவது கட்டிலுக்கு எழுந் தருளுவர். தத்துவப் போர்வைப்படி களே யும் பொழுது ஒவ்வொரு போர்வை படி களைந்ததும் கற்பூரம் ஆகும். போர்வை படிகளையும்பொழுது அரையர் "முனியே நான்முகனே" வியாக்கியானம் சேவித்துக் கொண்டிருப்பர். கடைசியில் "விரகம் தின்ற உடம்பைக் காட்டுகிருர்" என்று சொல்லி முடிப்பதும் கடைசிப் போர்வை படி களைந்து ஆழ்வார் தன் திருமேனி யுடன் சேவை சாதிக்கும் காலமும் ஒன்ருக இருக்கும். உடனே கற்பூரம் ஆகும். கடைசியாக ஆழ்வார் கைத்தலத்தில் எழுந்தருளப் பெருமாள் திருமுன்பு நிறை யத் திருத்துழாய் சமர்ப்பித்து ஆழ்வாரைப் பெருமாள் திருவடியில் எழுந்தருளப் பண்ணி ஆழ்வாரையும், பெருமாள், நாச்சி மார்கள் திருமுக மண்டலம் வரையும் திருத்துழாய் சமர்ப்பித்து கற்பூரம் ஆகும் (சாற்றுமுறை ஆகும்). அரையர் சாற்று முறைப் பாசுரங்கள் சேவிப்பர். ஆழ்வார் உடனே திரும்பவும் தன்னுடைய இருப் பிடத்திற்குக் கைத்தலத்தில் எழுந்தருளு வர். உடனே பொலிந்து நின்றபிரான் பிர சாதம் பெற்றுக் கொள்வர். இரட்டைத் திருப்பதி தவிர மற்ற திருப்பதிகளிலிருந்து சாற்றுமுறைப் பிரசாதம் எழுந்தருளப் பண்ணி ஆழ்வார் சாத்திக் கொள்வர். இதற்குள் சூரியோதயமாகிவிடும். கொஞ்ச நேரம் கழித்துக் கோஷ்டி கூடித் தீர்த்தம், ஸ்ரீ ராமானுஜம், திருத்துழாய், விநியோகம் முதலியவை சாதிக்கப்படும். சாயுங்காலம் வரை ஒன்றும் நடக்காது.

இன்று 'மறியல்' என்று பெயர். ஆழ் வார் பெருமாள் பக்கத்தில் நெருங்கி எழுந் தருளியிருப்பர். அர்ச்சகர்கள் 'கம்பரந் தாதி' சேவிப்பர். அரையர் திருப்பாவை வியாக்கியானம் சேவித்து முப்பது பாட்டும் சேவிப்பர். இராத்திரி ஆகிவிடும். இராத் திரிதான் கோஷ்டியார்கள் திருவாய்மொழி பத்தாம் பத்து சேவிப்பர். சாற்றுமுறை, கோஷ்டியாகும். ஸ்தலத்தார் சாம்ராஜ்ய பட்டோலை வாசித்து ஆழ்வார் பட்டோலை சாத்திக் கொள்வர். பெருமாள், ஆழ்வார், ஆசாரியர் எல்லோரும் பரம பத வாசல் வழியாகவே வெளியில் எழுந்தருளி, பத்தி உலாவி, சேனை முதலியாருக்குப் பரமபத வாசல் திருக்காப்புச் சேர்க்க அருளிப்பாடு ஆகிப் பெருமாள் உள்ளே எழுந்தருளி விடுவர். ஆசாரியர்கள் ஆழ்வாரிடம் மரி யாதை பெற்றுக்கொண்டு அவரவர் கோவிலுக்கு எழுந்தருளுவர்கள். ஆழ் வார் பரமபத வாசலுக்குப் பக்கத்தில் கட் டிலில் எழுந்தருளி யிருப்பர். விடியற் காலம் ஆழ்வாருக்குச் சௌரித் திருமஞ் சனம் நடக்கும். இதற்கு வீடுவிடைத்திருமஞ் சனம் என்று பெயர். திருமஞ்சனம் முடியும் வரை புருஷஸூக்தம் சேவித்துக்கொண்டு கோஷ்டியார்கள் கீழே உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். இது இன்றைய விசேஷம். ஈர ஆடைத் தீர்த்தம் ஆனதும் ஆழ்வார் ஆஸ்தானத்தில் கற்பூர சேவை யாகி எப்பொழுதும்போல் திருத்துழாய் சாதிக்கப்பட்டபின் கிளிப் பல்லக்கில் ஆழ் வார் சௌரியுடனும், சாம்ராஜ்ய பட்டோலை யுடனும் சேவை சாதிப்பர், சகல வாத்தி யங்களுடனும் உள்ளே எழுந்தருளுவர். உள் பிராகாரமாக திருப்புளியாழ்வாரடியில் பரமபத வாசலுக்குச் சமீபத்தில் ஆழ்வார் எழுந்தருளியதும், அரையருக்கு அருளிப் பாடிட்டு, அரையர் கொண்டாட்டம் முதலி யன சேவித்ததும் அருளிப்பாடு சாதிக்க விண்ணப்பித்ததும் அர்ச்சகர், 'அரங்கர் சரணலையா, அழகர் சரணலையா, அப்பன் சரணலையா, நம்பி சரணலையா, ஆதிநாதன் சரணலையா, மதுரகவி தம்பிரான், நாதமுனி தம்பிரான், எதிராசன் தம்பிரான், புவிப் பாவலவர் தம்பிரான், தம்பிரான்மார் தம்பி ரான், "நம் ஊர் நித்ய வாசம் பண்ணும் பேர் நித்ய வாசம் பண்ணும்படியும், திருப் பதி வாசங்கள் நின்றும் வந்தபேர், கோயில் வாசங்கள் நின்றும் வந்தபேர், ராஜத்வாரங் கள் நின்றும் வந்தபேர், கிராமாந்திரங்கள் நின்றும் வந்தபேர் அடுத்த மார்கழித் திருக்கல்யாணத்துக்குத் திரும்ப விடை கொள்ளத் திருவுள்ளமார"என்று அருளிப் பாடு சாதித்ததும், கோஷ்டியார்கள், "நாயந்தே! நாயந்தே!" என்றதும் சகல மங்கள வாத்யங்களுடனும் உள்ளே எழுந் தருளுவர். மார்கழித் திருக்கல்யாணம் பூர்த்தியாகி விட்டபடியால் அன்று சாயங் காலம் தை மாதம் 3-ஆம் தேதி நடக்க வேண்டிய கனுப்பார்வேட்டை உத்ஸவம் நடக்கும். 卐



ஸ்ரீ கோமளவல்லித் தாயார்,
திருக்குடந்தை.

அன்பளிப்பு :
திரு. N. கிருஷ்ணசாமி,
சென்னை-17.

# இருளும் அருளும்

கவியோகி மகரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள்
அடையாறு, சென்னை.

[லிட்வியாவின் தலைநகர் ரீகா; அங்கே உலகப் போரில் பகைவர் புகுந்து படுகொலை செய்தனர். லிட்வியர் கடும் பகைவரை எதிர்த்துப் போராடிக் களபலியாகி முடிவில் விடுதலைக் கொடி நாட்டினர். விடுதலைப் போரில் உயிர் கொடுத்த வீரர் மயானத்தில், தியாகவீரர் விழா நடந்தது. அதில் சுத்தானந்தர் பேசிய பேச்சின் சுருக்கத்தை இங்கே தருகிறோம். —ஆசிரியர்]

## 1. உலக வாழ்வு

நாம் ஒரு மயானத்திற் கூடியிருக்கிறோம். இங்கே ஆயிரக் கணக்கான வீரர் உடல்கள் புண்ணாகி மண்ணாயின. இவர்கள் உடலில் வாழ்ந்தது எது? அது எங்கே போனது? அதே உயிர்தான் நம் உடலிலும் துடிக்கிறது; இதுவும் ஒருநாள் உடற் சட்டையை உதறிச் செல்லும். கடிகாரம் டக்டக் என்று ஓடுவது போல நம் உள்ளத்திலும் ஏதோ ஒன்று துடிக்கிறது; இந்தத் துடிப்பின் நடிப்பே வாழ்க்கை; துடிப்பு நின்றால், மூச்சு நிற்கும்; மூச்சு நின்றால் முடிந்தது வாழ்வு; பிறகு நாமும் இதே மயானத்திற் புதைந்து மண்ணாக வேண்டியதுதான். மண்ணாவதா மானிடம்? இதற்காகவா நமக்குப் பருவுடலும் நுண்ணுடலும், அருளுடலும் அமைந்தன? நன்றாகச் சிந்திப்போம்.

## 2. உலக மேடையில்

நாம் இந்த உலக மேடையில் மானிடம் பூண்டு ஆண், பெண்ணாக நடிக்கிறோம். நமது காட்சி முடிந்ததும் வேடத்தை உதறிச் செல்ல வேண்டியதே. திரை தூக்கியதும் மேடைமேல் வருகிறோம்; நடக்கிறோம்; திரை விழுந்ததும் எங்கோ செல்கிறோம். எங்குற்றோம்; என்ன செய்ய வந்தோம்; என்ன செய்கிறோம்; எங்கே செல்கிறோம் என்ற கேள்வியை எல்லா அறிவாளிகளும் கேட்டுக் கொள்ள வேண்டும்.

## 3. மாணிக்க வாசகர்

எங்கள் நாட்டில் மாணிக்க வாசகர் என்ற அருட்பெரியார் இருந்தார். அவர் பாண்டிய மன்னனுக்கு முதல் மந்திரியாகிப் பட்டங்கள் பெற்று மிகச் செல்வாக்குடன் வாழ்ந்தார். ஆனால் ஒருநாள் அவர் உள்ளத்தில் "நான் யார்? என் உள்ளம் யார்? ஞானங்கள் யார்?" என்ற கேள்விகள் எழுந்தன. உடனே மந்திரி வேலையை விட்டார். வாழ்வின் நுட்பத்தை அறிந்தார்; தமது வாழ்வை ஈடேற்றும் சிவஞானம் அடைந்தார். அனைத்தும் துறந்தார். உலகம் தந்த இடர்களை அவர் பொறுத்து வென்றார். "கடவுளே என்னை உனக்கு ஈந்தேன்; உன் சித்தம் நடக்கட்டும்; நன்றும் தீதும் உன் இச்சை" என்ற உள்ளுணர்வில் வாழ்ந்தார் மாணிக்கவாசகர். அவர் ஆன்மா இறைவனுக்கு முறையிட்டதெல்லாம் திருவாசகம் என்ற அரிய நூலில் உள்ளன. அதிலிருந்து ஒரு பாட்டைப் பாடி விளக்குகிறேன்.

## 4. மண்ணும் விண்ணும்

"பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்"

நாம் உலகைப் பார்க்கிறோம்; வானைப் பார்க்கிறோம்; வானத்திலிருந்து காற்று, கதிர், மழை எல்லாம் வருகின்றன; அதனால் இங்கே உயிர் வாழுகிறோம். கதிரவன் எழாவிட்டால், காற்று வீசா விட்டால், நாம்

வாழ முடியுமா? உலகைச் சுற்றி எத்தனையோ இயற்கை அற்புதங்களைக் காண்கிறோம். அத்தனையையும் நாமா படைத்தோம்? நாம் கதிரவனை உண்டாக்க முடியுமா? தமது ஆய்வகத்தில் (Laboratory) செய்யும் போலிக் கதிரவன் (Zeta), ஈலியக் கதிரால் (Helium) மினுக்கி மறையும் எண்ணரிய உடுக்கணங்களைப் பாருங்கள். இவற்றில் ஒன்றை நாம் ஆக்க முடியுமா, அடைய முடியுமா? பாரோடு விண்ணைப் படர்ந்த ஒரு பரம்பொருளை நாம் நம்பியே ஆகவேண்டும். நாம் உறங்கும் போதும் உள்ளம் துடிப்பது எதனால்? நாம் சிந்திப்பது எதனால்? கேட்பதும் பார்ப்பதும் எதனால்? நம் உறுப்புக்களில் உயிராக இருந்து இயக்குவது எது? என்று ஆராய்ந்தால் நம்முள் ஒன்று மறைவாக இருப்பது தெரியும்; அந்த மறைபொருளை விளக்குவதே திருமறையாகும். அதையே வேதம் என்கிறோம்.

## 5. வானை வணக்கம்

மார்க்கோனி வானொலிப்பை ஆராய்ந்தான். தனது மாடிக்கும் தெருக்கோடியில் இருந்த ஒரு நண்பன் அறைக்கும் கம்பி நீட்டிப் பேசி வந்தான். ஒருநாள் பேச்சு எடுக்கவில்லை. "ஐயோ என் விஞ்ஞானம் வீணானதே; ஆராய்ச்சி அவலமானதே" என்று குமுறி யழுதான். அவன் மனைவி "ஏன் ஆத்திரப்படுகிறீர்" என்று கேட்டாள். "அம்மா என் முயற்சி வீணானதே; என் பேச்சை வான் ஒலிக்கவில்லையே" என்று வருந்தினான். "கணவரே, இடிவிழுந்து, மின்னகம் (Power Station) பழுதுற்றது. மின் சக்தி இல்லை. அதனால் பேச்சு எடுக்கவில்லை. விண்ணகத்தைப் பாரும்" என்றாள். மார்க்கோனி உடனே உணர்ந்தான். வானொலிப்பு என் செயலன்று.

வானாகி, மண்ணாகி
　　வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி
　　உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனது என்று
　　அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை
　　என் சொல்லி வாழ்த்துவனே.

என்ற மாணிக்கவாசகர் கருத்தும் உணர்வும் மார்க்கோனியுட் புகுந்தெழுந்தன. நான் கண்டேன் என்ற ஆணவம் நாணிக் குவிந்தது. "நான் அல்ல அவன். விண்ணகத்தான் அருளின்றி மண்ணகத்தார் வாழ்வாரோ? வானணுக்கள் இன்றி வானொலிப்பு என்றாகும்?" என்று நினைத்து வானை நோக்கிக் கை கூப்பினான். ஒருமணி நேரத்தில் மின் சக்தி வந்தது. வானொலியும் எதிரொலியைத் தந்தது. நண்பர் பேசினார்.

ஆதலால் நமக்கு மேலே திருவருள் ஒன்று உண்டு என்பதை விஞ்ஞானப் புலவரும் ஒப்பியே தீரவேண்டும்.

## 6. இருளை விளக்கும் அருள்

இன்றுலகில் அமைதியில்லை; மனித மூளை வானை அளாவுகிறது. கடலைத் துருவுகிறது. அணு சக்தியால் ஆளை மிரட்டுகிறது. செருக்கும் சிறுமையும், தருக்கிச் சருக்கி விழுகின்றன. இயற்கையின் உள்ளத்தை ஆய்குழாயில் வடிக்கப் பார்க்கிறான் விஞ்ஞானி. ஆனால் தாகந்தணியாத டாண்டலஸ் (Tantalus) போலும், தொட்டதை எரிக்க வரம் வாங்கிய பஸ்மாசுரன் போலும் தனது விஞ்ஞானம் தன்னையே பழிவாங்குகிறது. பூதபௌதிக விளக்கமான விஞ்ஞானம் உலகைப் போர்க்களமாக்குகிறது. அரசியல் பேராசையுடன் கூடிய விஞ்ஞானம் அணுக்குண்டாகி அழிவு செய்கிறது. இரோஷிமாவில் விழுந்த அணுகுண்டு (Hydrogen Bomb) கோபால்டு குண்டு, டைடானியம் குண்டுகள் குவிந்து கிடக்கின்றன. மனித மூளையில் அழிவரக்கன் புகுந்துள்ளான். உள்ளம் வறண்டுள்ளது. கருத்திலே கருணையில்லை. வாழ்வு சுயநலச் சூதாட்டமானது. மனம் இருளில் மயங்குகிறது. வழி தடவித்தடவி மனிதன் எங்கே செல்லுகிறான். இருளில் மோதித் திகைக்கிறான், அந்த மடவிருளில் தங்கக் குவை யிருந்தாலென்ன? வைரமணிக் குவை யிருந்தாலென்ன? அவற்றில் மோதினால் மண்டைதான் உடையும். இருட்டை மிரட்டி வெருட்ட முடியாது. மனவிருளை மின்னொளியும் மாற்றாது. பிறகு?

## 7. அருள் ஒளிவேண்டும்

அருளொளி வேண்டும். இங்கே அழகான சிலைகள் உள்ளன. லிட்வியக் கவியரசன் யானெஸ் ரெயின்ஸின் (Yanis Raince, 1860-1929) எடுப்பான சிலை இங்கே அவனது புதைகுழியின் மேல் உள்ளது. அதில் "ஒளியாய் எழுவேன்" என்று எழுதப் பெற்றுள்

ளது. மாந்தர் மன இருளைப் போக்க இந்தக் கவிஞன் அருள் ஒளியாக நிலவ வேண்டு கிறேன்.

## 8. அருட்சோதி ராமலிங்கம்

எங்கள் நாட்டில் அண்மையில், காந்தியடி கள் பிறந்தபோது இராமலிங்கம் என்ற அரு ளாளர் இருந்தார். அவர் உலகறிஞர், உள் ளறிஞர். சாதிசாதி என்ற உலகிற்கு சோதி சோதி என்ற சுவிசேஷத்தைக் கொண்டு வந் தார். இருளுலகிற்கு அருட்சோதி அளித்தார். இறைவனை அருட்பெருஞ்சோதியாகக் கண் டார்; இறைவனைக் காண்பதற்குத் தனிப் பெருங் கருணையைச் சாதனமாக்கினார். இன்றுலகிற்கு சோதி ராமலிங்கரின் அருள் வழியே தாரகமாகும். எங்கள் தமிழகத்தில் பல நூற்றாண்டுகளாக அருளியக்கம் உரு வாகி வந்துள்ளது.

## 9. அருளியக்கம்

வேதரிஷிகள் "ஜோதிரேகம் தபந்தம் உத யதி ஏஷ, ஸூர்ய; உலகிற்கு உய்வளிக்கும் ஓர் அறிவுக் கதிரவன் அருளொளி வீசி எழுந் தான்" என்கிறது. திருமூலர் என்ற சித்தர் மூவாயிரம் பாடல் பாடினார். ஒவ்வொன் றும் உள்ளனுபவச் சுடர்மணி; ஒரு வரியை இங்கே குறிக்கிறேன்.

உள்ளத் தொருவனை
உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி
நீங்கா ஒருவனை

உள்ளத்தில் ஒளிரும் நீங்காத ஒளிமணி விளக்கே கடவுள். மனங் கடந்து உள்ளத் தில் ஒளிரும் அருட்சோதி. இதையே மாணிக்கவாசகர் "உள்ளத்து எழுகின்ற ஞாயிறு" என்றார்.

இந்தச் சோதி இதோ உங்கள் உள்ளே உள் ளது. இந்த அருட்சோதி எழுந்தாலே இருள் விலகும். இருள் விலகினாலே பொருள் விளங்கும். உள்ளப் பொருளை அறியாதவன் வாழ்வு பொருளற்ற வெற்றுரை போலாகும்.

அருளாலே உள்ளத்து
அறிவா யிலங்கும்
பொருளாலே இன்பப் பொலிவு.

## 10. அருளே அமைதி தரும்

சாதி சமய பேதங்கள், நாடு நிற வேறுபாடு கள், எனது நான் எனக்கே என்னும் ஆண வத் திமிர் எல்லாம் அருள் ஒளிமுன் இருளைப் போலக் கரைந்து மறையும். அருள் விளங்கி னால் விஞ்ஞானம் அரசியற் போரை விட்டு ஆக்க நலம் புரியும். அப்போது உலகில் அமைதி நிலவும், அன்பு நிலவும், அறந்தழைக் கும். அருளே அமைதி தரும்.

அன்பர்களே! நீங்கள் விஞ்ஞான ஆயகம் அறிவீர்கள். நமக்குள் ஒரு தாயகம் உள் ளது. அது நம்மையே அறியும் ஆயகம். அதில் எத்தனையோ சிந்தனைகள், எத்தனையோ கனவுகள் நிரம்பிக் கிடக்கின்றன. உள்ளே கருத்தை ஊன்றி ஆராய்ந்தால், புறப் பொருளைவிட அற்புதமான அகப் பொருளைக் காண்பீர்கள். அப்போது உள்ளிருப்பதே உலகாக விரிந்ததை உணர்வீர்கள். அப் போது அருள் விளங்கும்.

உள்ளத்தான் ஓங்கும்
உலகத்தான் பேரின்ப
வெள்ளத்தான் விண்ணின் விளக்கு

என்பதை உணர்வீர்கள். இனிச் சிறிது உள் ளடங்கி யிருங்கள்.



# கடவுளுக்கும் உலகத்திற்கும் உள்ள உறவை விளக்கும் உருவகம்.

[வேதார்த்தரத்னுகரம், ஸ்ரீ அக்நிஹோத்திரம் ஸ்ரீ இராமாநுஜ தாத்தாசார்யஸ்வாமிகள் கும்பகோணம்.]

உலகம் பிரத்யட்சமாக இருப்பது. கடவுள் ஐம்புலன்களுக்கும் உலகத்திற்கும் அப்பால் உள்ளவர். நாஸ்திகர்களாக உள்ளவர்கள் உலகத்தை மட்டும் ஒப்பி அப்பால் உள்ள கடவுளை ஒப்ப மாட்டார்கள். ஆஸ்திகர்களோ உலகையும் ஒப்பிக் கடவுளையும் ஒப்புகிறார்கள். உலகம், அதனுடைய இயற்கை, இவைகளை நன்றாக ஆராய்ந்த பிறகு இவ்வுலகம் தானுக இயங்குவதில்லை என்ற முடிவு செய்து, இதற்கு அடிப்படையாகக் கடவுளை ஒப்பிக் கடவுளுக்கும் உலகுக்கும் உறவு உண்டு என்று கூறுவர். அந்த உறவை வேதாந்த நூல்கள் பலவிதமாக விளக்கு கின்றன. ஒவ்வொரு கருத்தை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு வேதாந்திகள் விளக்குகின்றார்கள்.

உலகம் முழுவதும் கடவுளின் படைப்பு என்று ஒரு சாரார் கூறுகின்றனர். மற்றொரு சாரார் அனுதியாக உலகம் இருந்து வருகிறது. ஆனால் அதைக் கடவுள் அப்போதைக்கப்போது உருவாக்குகிறார் என்று கூறுகிறார்கள். கடவுள் குயவன் போல் வெளியில் நின்று உருவாக்கவில்லை. ஆனால் இயற்கையின் உட் புகுந்து அந்த அந்த வஸ்துக்கள் இயங்க உதவுகிறார் என்று மற்றும் சிலர் கூறுகிறார்கள். கடவுள் உபகரணங்களை வைத்துக் கொண்டு உலகை உருவாக்குகிறார் என்று சிலரும், உபகரணங்களின் உதவியே வேண்டாம் ஸங்கல்பத்தாலேயே உலகத்தைப் படைக்கிறான் என்று வேறு சிலரும் கூறுகிறார்கள். கடவுள் தானே ஜீவாத்மவர்க்கமாக ஆகி ஒவ்வொரு வஸ்துவிலும் இருந்து வருகிறான் என்று சிலரும், ஜீவவர்க்கங்களைப் போல் கடவுளே உலகமாக ஆகுகிறான் என்று மற்றும் சிலரும், ஜடமான பாகமாக கடவுள் ஆகவில்லை, கடவுள் இருந்த ஜடமான அம்சம் ஜடப் பிரபஞ்சமாயும், ஜீவாம்சம் ஜீவ வர்க்கமாகவும் ஆகிறது என்று சிலரும் கூறுவர். உலகம் என்ற உருவுள்ள வஸ்துவே கிடையாது என்று சிலர் சொல்லுவர். உலகம் கடவுள் உருவத்தில் ஏற்பட்டுள்ள தோற்றம் என்றும் சிலர் இயம்புவர்.

இப்படி உலகத்திற்கும் கடவுளுக்கும் உள்ள உறவு பலவிதமாக விளக்கப் படுகிறது. உலகத்தை ஒப்புக் கொண்டு கடவுளை மறுப்பது போல், கடவுளை ஒப்புக் கொண்டு உலகை மறுப்பதும் ஒரு கொள்கையாக இருந்து வருகிறது. உருவுள்ள உலகமே இல்லை. ஒரு கணத்துக்குக் கணம் இயற்கை மாறுதல் உறக் காணுவதால், ஸ்திரமான உலகமே கிடையாது; உலகம் மனிதனுடைய புத்தியினுல் கல்பிக்கப்பட்டது. வியவகாரத்திற்காகவே உலகம் இருப்பதாகச் சொல்லி வரப்படுகிறது. உலகில் உருவம் பெயர் இரண்டும் மனிதனுடைய புத்தியின் படைப்பு. அனுதியான வாசனையினுல் உலகம் இருப்பதாக மனிதன் நினைக்கிறான் என்பது போன்ற கருத்துக்கள், உலகத்தை மறுக்கப் பயன்படுகின்றன. இது போன்று எல்லாக் கருத்துக்களுமே வேதத்தில் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

வேதம், உலகம் கடவுள் இரண்டையும் ஒப்புக் கொள்வதனுல் உலகம் கடவுளின் படைப்பு என்று சொல்வதோடு, கடவுளே உலகமாக ஆகியிருக்கிறான் என்றும் கூறுகிறது. இரு சிருஷ்டி வாதம், பரிணுமவாதம் இரண்டையும் ஒன்று படுத்திப் பேசும் கொள்கையையே அடிப்படையாகக்

கொண்டது. கடவுள் உலகத்திற்கு நிமித்த காரணம் மட்டும் அல்லர். உபாதாந காரண மாகவும் கடவுள் விளங்குகிருர். ஸ்தூல திருஷ்டியில் சிருஷ்டி வாதமும், ஸூக்ஷ்ம திருஷ்டியில் பரிணும வாதமும் உருவாகிறது. கடவுளுக்கு முக்கியத்துவம் கொடுத்து உல கத்தை இரண்டாம் பக்ஷமாக நினைப்பவர் களும் உலகமே கடவுளின் உருவம் என்று கூறுகிருர்கள். ஸ்ரீமத் பாகவதம் இந்த அடிப்படையிலேயே பேசுகிறது. உலகமே கடவுளின் உருவமாக இருப்பதால் உல கத்தை மதித்து வணங்க வேண்டும் என்று ரிஷப தேவர் கூறுகிருர். கீதையிலும் பக வான், உலகமே கடவுளின் உருவாக இருப் பதால் உலக வாழ்க்கை நடத்துவது கடவு ளின் வழிபாடு என்று குறிப்பிடுகிருர். பரி ணும வாதத்தோடு சமாதானம் செய்து கொண்ட சிருஷ்டி வாதம், கடவுள் உல கைப் படைப்பது என்பது தன்னையே தான் படைத்துக் கொள்வது என்று விளக்குகிறது. எல்லாவிதக் கொள்கைக்கும் பொக்கிஷமாக விளங்கும் வேதம் கடவுளுக்கும் உலகுக்கும் உள்ள உறவை ஒரு உருவகத்தில் பின்வரு மாறு விளக்குகிறது. இது ஒரு கேள்வி பதில் மூலம் விளக்கப்படுகிறது.

உலக மனித வர்க்கம் உண்ணுவதிலும் உறங்குவதிலும் பிறரைப் புகழ்வதிலும் அர்த்தமில்லாத பேச்சுக்களைப் பேசுவதிலும் காலத்தையே போக்குகிறது என்று வருத் தப் பட்டு வேதம் பேசுகிறது. மனிதனுடைய அறிவு ஸ்தூல திருஷ்டியோடு நின்று விடு கிறது. அறிவு ஆழ்ந்து போகுவதில்லை என் றெல்லாம் வேதம் வருத்தப்படுகிறது. ஒரு மனிதன் ஒரு சிறிய வஸ்துவைப் பார்த்தால் அது எங்கிருந்து வந்தது? எப்படி உருவா கிறது? என்று கேட்கிருன். ஒரு கட்டிடத் தின் உள் புகுந்தால் இதை யார் கட்டினுர் கள்? எந்த சாமான்களைக் கொண்டு எப்படிக் கட்டினுர்கள்? என்றும் கேட்டுத் தெரிந்து கொள்கிருன். உலக விஷயத்தில், ஸ்தூலத் தோடு அறிவு நிற்காமல் ஸூக்ஷ்மமாக உள் புகுந்து தெளிவை வேண்டுகிறது. ஆனுல் ப்ரும்மாண்டமான இந்த உலகை, பலவித இயற்கைகளோடு விளங்கும் உலகை, வீடு காடு மலை மடுவு என்று பலவிதமாகத் தோற்றமளிக்கும் உலகை, எவன் கட்டினுன்? இவ்வித விசித்திரமான உலகத்திற்குச் சாமான் கள் எங்கிருந்து வந்தன? மிருதுவான புஷ் பத்தையும், பாருங்கல்லையும் பார்க்கிருேம். ஆனுல் இது எப்படி வந்தது? என்று புரிய வில்லை. இதைப் பற்றித் தெரிந்து கொள்ள நாம் முயற்சி செய்வதும் இல்லை. இதைப் பற்றி உலகத்தார் சிந்தித்தார்களா? சிந்தனை பண்ணுங்கள் என்று கேட்டுக் கொண்டு, வேதம் ஓர் உருவகத்தைக் காண்பிக்கிறது. கேள்வி பின்வருமாறு; ஓ மனிதர்களே! ஆகாசமும் பூமியும் கலந்துள்ளதும் பலவிதப் பிராணி வர்க்கங்கள் நிறைந்ததும் பலவித உருவத்திலும் உள்ளதுமாகக் கண்முன் நிற்கும் இவ்வுலகம் எதிலிருந்து உண்டாக்கப் பட்டது? எந்த மரத்தைக் கொண்டு இந்தக் கட்டிடம் கட்டப்பட்டது? எந்தக் காட்டி லிருந்து மரம் கொண்டு வரப் பட்டது? அறி வாளிகளாக உள்ள நீங்கள் இதை உங்கள் மனதிற்குள்ளே கேட்டுத்தெரிந்து கொள்ளுங் கள்! அதுமட்டும் அல்லாமல் இந்த உலகத் தைத் தாங்கிக் கொண்டு நிற்பது எது வென் றும் தெரிந்து கொள்ளுங்கள் என்று, புதிர் போன்ற இவ்வித மந்திரங்கள் வேதாந்தக் கருத்துக்களை வெகு சுலபமாகப் புரியவைக் கின்றன.

இங்கே எந்த மரத்திலிருந்து இந்த உருவம் ஆக்கப்பட்டது என்ற கேள்வி மிகவும் முக் கியமானது. ஒரு தச்சனிடம் மரக்கட்டை யைக் கொண்டுபோய்க் கொடுக்கிருேம். அவன் அந்த மரத்தைச் செதுக்கி மரத்தி லிருந்து ஒரு உருவை வெளிக்குக் கொண்டு வருகிருன். காட்டிலிருந்த மரங்களை நாட் டிற்குக் கொண்டு வந்து மேஜை நாற்காலி தூண் உத்திரம் முதலிய பலவகை வஸ்துக் களாக்கி ஒரு வீட்டைக் கட்டுகிருன். வீடு பொம்மை என்பதும், திடீரென்று உண்டா னவை அல்ல. ஆனுல் காட்டிலுள்ள மரமே உருவ வேறுபாட்டை அடைந்து வீடாகவும் பொம்மையாகவும் காட்சி அளிக்கிறது என்று எண்ணுவதும், எந்த மரத்திலிருந்து இந்த உருவம் செதுக்கப் பட்டது என்ற கேள்வியும், எந்தக் காட்டிலிருந்து இந்த மரம் கொண்டு வரப்பட்டது என்று கேட்பதும், மிகவும் ஆழ்ந்து உள்ள கருத்தாகும். பொம் மைக்கு மரம் நேருக்கு நேரான காரணமாக இருந்தாலும், மரங்கள் பலவிதமாக இருப்ப தால் எந்தக் காட்டு மரம் என்ற கேள்வி பிறக் கிறது. அந்த அந்தக் காட்டின் இயற்கைக் குத் தகுந்தாற்போல் மரங்களும் மாறுகின் றன. ஆகவே இந்த மரம் எந்தக் காட்டைச் சேர்ந்தது என்று கேட்கும் கேள்வி, மரத்தின் வகையைப்பற்றிக் கேட்க ஏற்பட்டது. கட்டிடம் கட்டுவது பெரிதல்ல. அதைப் பாதுகாப்பது முக்கியமானது. பாதுகாப்பதில், வெளியில் நின்று பாதுகாப்பது என்பதும், அங்கேயே நின்று பாதுகாப்பது என்பதும்

வேறு வேருனவை. வெளியிலிருந்து பாது காப்பதில் பொறுப்பு இருந்தாலும் அதிகமாக இல்லை. உள்ளிருந்து பாதுகாப்பதில் பொறுப்பு அதைவிட அதிகம். பொறுப்புக் காகப் பாதுகாப்பதோடு மட்டுமில்லாமல் பாதுகாப்பதினுல் ஏற்படக்கூடிய பயனையும் நாம் பெறலாம்.

உதாரணமாக ஒரு வீட்டைப் பாதுகாக்கும் பொறுப்பை ஒருவனிடம் ஒப்படைத்திருக் கிருேம் என்று வைத்துக்கொள்வோம்.ஆனுல் அவன் அந்த வீட்டில் குடி இல்லை. வெளியில் இருக்கிருன். வீட்டில் குடி இருப்பவன் வேறு ஒருவன். அந்த வீடு உபயோகப்படா மற்போனுல் அது வீட்டில் இருப்பவனையே அதிகமாகப் பாதிக்கும். கட்டிடம் இடிந்து வீழ்ந்தால் வீட்டில் குடி இருக்க முடியாது. வெளியில் இருந்தபடியே வீட்டைப் பாது காப்பவன், குடி இருப்பவனின் கஷ்டத்தைப் பார்க்க மாட்டான். தனக்கு இஷ்டமான சமயத்திலே வீட்டைச் சீர் படுத்துவான். ஆகவே கட்டிடத்தை உள்ளிருந்து பாது காப்பது என்பது மற்ருெரு காரியம். யார் உருவாக்கினுன்? யார் அதிலேயே இருந்து கொண்டு பாதுகாக்கிருன் என்ற இரண்டு கேள்விகளும் இங்கு இருக்கின்றன. இங் குள்ள கேள்விக்குப் பதில் கண்டு பிடிப்பது தான் வேதாந்த விசாரம். இதற்கு அவர் அவர்களுடைய சிந்தனைகளுக்குத் தகுந்தாற் போல் பதில் காணப்படுகிறது. இதுதான் வேதாந்த சித்தாந்தம்.

வேதம், மனிதர்களின் சிந்தனைக்குப் பரி பூரணமான சுதந்திரத்தைக் கொடுப்பது. சிந்தனையின் வேகத்தை யாரும் தடுக்க முடியாது. சிந்தனையின் மூலம் ஏற்படும் முடிவும் பலவகையில் வேறு படலாம். மேலும் வேதாந்திகள் தங்களுடைய சிந்தனைக்குப்பரிபூரண உரிமையைக்கொடுத்து விட்டார்கள். அறிவினுடைய உதவியைக் கொண்டு கிடைக்கின்ற முடிவைக் கண்டு அவர்கள் பயப்படுவதில்லை. ஒரு குறிப்பிட்ட கொள்கைக்குத் தங்களை அவர்கள் கட்டுப் படுத்திக் கொள்வது கிடையாது. அறிவை உருவாக்கவே அறிவு ஏற்பட்டது என்ற கொள்கையை அவர்கள் பின்பற்றுகிருர்கள். மத விஷயங்களில் மத ஆசிரியர்களோ, மத நூல்களோ உபதேசித்தவைகளையே, அப்படி யே பின்பற்றியாகவேண்டும்; ஆனுல் சிந்தனைக் கும் பூரணமாக இடம் கொடுத்து அதன் மூலம் வரும் முடிவே முடிவு என்பதற்கு ஒரு கட்டுப்பாடும் தேவையில்லை.

முன் உருவக மூலம் கேட்கப்பட்டுள்ள கேள்விக்கு யஜுர் வேதத்தில் பதில் சொல்லப் படுகிறது. இந்த பதில் விசாரணையின் மூலம் ஏற்பட்ட முடிவே. பிரம்மம் தான் காடு. அதுவே மரம். அதிலிருந்து ஆகாயமும் பூமியும் உருவாக்கப்பட்டுள்ளன. பிரும்மமே உலகத்தில் நின்றுகொண்டு அதைத்தரிக்கிறது என்னும். இந்த பதிலை ஸ்தூலமாகக் கவனித் தால், எல்லாம் பிரம்மம் தான் அல்லது கடவுள்தான். கடவுளைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை என்ற கருத்துத் தோன்று கிறது. மரமே பொம்மை உருவத்திலும் வீட்டு உருவத்திலும் இருப்பதுபோல், உலக உருவில் பிரம்மமே இருப்பதாகக் கொள்ள வேணும்.

உலகத்தின் அடிப்படை எதுவானுலும், உலகம் கண்ணுக்குத் தெரிகிறது. அது வெளியிலும் தெரிகிறது. தோன்றும் உரு வத்தை யாரும் மறுக்க முடியாது, மறைக் கவும் முடியாது. உருவத்தின் உண்மையை ஒப்புக் கொள்வது வேறு; அதற்கு அடிப் படையாக உள்ளதை ஒப்புக் கொள்வது வேறு. குயவன் ஒரு மண் குடத்தைச் செய்கிருன். குடமாக இருக்கும் காலத்திலும் மண் இருந்து வருகிறது. ஆனுல் உருவம் மாறிவிட்டது. அவ்விதமே ஒரே பிரும்மம் தான் உலக உருவில் இருந்து வருகிறது என்று கூறப்படுகிறது, தெளிவாகிறது. இங்கு எதிலிருந்து எது உண்டாயிற்று? என்ற அம்சமே முக்கியமாய் நிற்பதால், யார் உண் டாக்கினுர்கள் என்ற கேள்விக்கு இடமே இல்லை. அது இங்கு முக்கியமாய் ஆவதில்லை. இங்கு யார் உருவாக்கினுர்கள் என்று சொல் லப்படாமல் போனுலும், கடவுள்தான் என்று தானுகவே வெளியாகிறது. அதனுலேயே உபநிஷத்துக்களில் தன்னைத் தானே படைத் துக்கொண்டான் என்று மற்ருேரிடத்தில் சொல்லப்படுகிறது.

இறைவன் படைப்பைச் செய்கிருன். ஆனுல் அதை அவன் திட்டம் இட்டுக் கொண்டு செய்கிருன். திட்டம் போடும் பொறுப்பும் அவனைச் சேர்ந்தது. திட்டம் போடுபவன் அவனே. கட்டிடம் கட்டு பவனும் அவனே. கட்டிடத்தைப் பாது காப்பவனும் அவனே. கட்டிடத்திற்கான சாமான்களாக இருப்பவனும் அவனே. கடவுளைத் தவிர உலகில் வேறு ஒன்றும் கிடையாது என்பதே இப்படி விளக்கப் பட்டது.

# ஸ்ரீராமாயண ரஸப்ரவாகம்

(மகாவித்துவான். பி. ப. அண்ணங்கராசாரிய சுவாமிகள், காஞ்சிபுரம்)

வான்மீகி நாரத ஸம்வாதத்தில் இது ஐந்தாவது வினு. குணவான் யாவன்? வீர்யவான் யாவன்? தர்மஜ்ஞன் யாவன்? க்ருதஜ்ஞன் யாவன்? என்னும் நான்கு வினுக்கள் விவரிக்கப்பட்டன. ஸத்யவாக்யன் யாவன்? என்கிற வினு இனி விவரிக்கப்படுகின்றது.

### ஸத்யத்தின் ஸ்வரூப நிரூபணம் :

ஸத்யவாக்யன் என்பதற்கு ஸத்யமே சொல்லுபவன் என்பது கருத்து. ஸத்யமாவது என்ன? என்பதைப் பற்றி முன்னம் ஆராய்ச்சி செய்ய வேண்டும். 'உள்ளதை உள்ளபடியே கண்டு உள்ளபடியே சொல்வதுதான் ஸத்யம்' என்று உலகமெல்லாம் கொண்டிருக்கின்றது. இதை நம் ஆசாரியர்கள் ஆராயுமிடத்துச் சிறிது சிக்ஷித்துப் பேசுகிருர்கள். "உள்ளதை உள்ளபடியே கண்டு உள்ளபடியே சொல்லுவது" என்பதில், 'உள்ளத்தை உள்ளபடியே காண்பதென்பதையும் சேர்த்திருப்பது கூடாது; ஏனெனில்; உலகில் மனிதர்களுக்கு ஒன்றை வேருென்ருக மயங்குகையாகிற மருள் சகஜமானது. கயிற்றைக் கண்டு பாம்பு என்று மருள்வது மனிதர்களுக்கு ஸகஜமேயன்ருே. இப்படிப்பட்ட ப்ரமங்கள் பலபல நேருமாதலால், அந்த ப்ரமத்தினுல் ஒன்றை வேருென்ருகத் தெரிந்து கொண்டவன்தான் தெரிந்து கொண்ட விதமாகவே யன்ருே பிறர்க்குச் சொல்ல முடியும். கயிற்றைக்கண்டு ஸர்ப்பமென்று மருண்டவன் பாம்பு பாம்பென்று கத்தினுலும், அங்கே ஸர்ப்பமுள்ளதென்று ஒருவரிடம் கூறினுலும், அது அஸத்ய வசனமாக வேண்டிவரும். உண்மையில் அது அஸத்ய வசனமாகாது. அவன் தான் கிரகித்தபடியேயன்ருே சொல்லியிருக்கிருன். இது அவன் கருத்தால் ஸத்ய வசனமேயொழிய அஸத்ய வசனமாகாது. "ஏனுகாது? இவன் அஸத்யமாகத்தானே கிரகித்து விட்டான்; அது பிசகல்லவோ?" என்று சிலர் வாதிக்கக்கூடும். இந்த வாதம் பொருந்தாது. ஒன்றை வேருென்ருக க்ரகிக்கையாகிய ப்ரமம் என்பது தெய்வச் செயலாக நேருமதே யொழிய வேறல்ல. அது, மருள் அல்லது மயக்கு என்கிற குற்றத்தின்பாற் படுமே யல்லது பொய் என்கிற குற்றத்தின்பாற்படாது.

### கீதாபாஷ்ய டீகைகளைக் கொண்டு ஸத்யத்தை நிரூபித்தல்:

பகவத் கீதையில் பத்தாவது அத்யாயத்தில் நான்காவது சுலோகத்தில் 'க்ஷமா ஸத்யம் தமச் சம:" என்றவிடத்து ஸத்யமின்னது என்பதை நிரூபிக்கும் ஸ்ரீராமாநுஜ பாஷ்யமும், அதற்கு வேதாந்த தேசிகருடைய டீகையும் இங்கு நோக்கத் தக்கன. 'உள்ளதை உள்ளபடியே கண்டு சொல்வது சத்யம்' என்னுமல், 'தான் கண்டபடியே சொல்வது சத்யம்' என்ருர் பாஷ்யகாரர். இதன் கருத்தை விவரித்தார் தேசிகர்.

### ஸத்ய விஷயத்தில் ஸ்மிருதி வசனங்கள் காட்டுதல் :

இனி, 'தான்கண்டபடியே சொல்வது சத்யம்' என்றதிலும் சிக்ஷிக்க வேண்டிய

துண்டு; கண்டது கண்டபடியே சொல்லுவதும் ஸத்யமாகாது; ஏனெனில், வியாஸ ஸ்மிருதியில் 'ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம்' என்று சொல்லப்பட்டுள்ளது, கண்டது கண்டபடியே சொல்லுவதானது, பிராணிகளுக்கு ஹிதமாயிருந்தால் நன்றே; அப்படியல்லாமல் அஹிதமாயிருக்குமானல் அது ஸத்யமாகாது; அஸத்யமாகும்.

"ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்" என்கிற வசனமும் இங்கு அறியத்தக்கதாகும். பிறர்க்கு வெறுப்பை யுண்டாக்க மாட்டாத வார்த்தை எதுவோ அதுவே ஸத்யமென்றும், பிறர்க்கு வெறுப்பை விளைவிக்கும் வார்த்தை உண்மையில் ஸத்யமாயிருந்தாலும் அஸத்யமாகவே கருதப்படு மென்றும் நூற்கொள்கையுள்ளது. ஒருவன் சொல்லுகிற ஸத்யவசனத்தினுல் பிறர்க்கு அனர்த்தம் விளையுமாயின் அது ஸத்ய வசனமாகாது, அஸத்யவசனமாகவே கொள்ளத் தகும் என்பர் பெரியோர்.

**ப்ரக்ருத விஷயத்தில் சங்கா பரிஹாரங்கள் :**

இவ்விஷயத்தில் பல சங்கைகள் தோன்றும். நியாயாலயத்தில் நடக்கும் விவகாரங்களில் உண்மை தெரிவதற்காகச் சில யோக்யர்களான மகான்களைச் சாட்சியிடுவதுண்டே; அவர்கள் உண்மையை யொளிக்காமல் சொல்லித்தானே யாக வேண்டும்; உள்ளதை உள்ளபடி யுரைத்தால் ஒரு தலையில் அனர்த்தம் விளைந்து தானே தீரும்: அப்படி அனர்த்தத்தை விளைவிப்பதான ஸத்யத்தைச் சொல்லலாகாதென்பது நூற்கொள்கையானுல் பிராமாணிகர்களாயுள்ளவர்கள் ஸத்யத்தை மறைத்துத் தீரவேண்டுமே. அது யுக்தமாகுமோ ? பிராமாணிகர்களின் செயல் அப்படிக் காணப்படவில்லையே. கொலை, களவு, வஞ்சகம் முதலிய விஷயங்களில் ஸாக்ஷிகளாகக் கோரப்பட்டவர்கள் உண்மையை வெளியிட்டுப் புகழ்பெறுகின்றுர்களே; அவர்கள் உண்மையை யொளித்தால் அஸத்யவாதிகள் என்று இகழவும் படுகிறுர்களே; அவர்களின் உண்மை யுரையினுல் ஒரு தலையில் தீங்கு விளைந்தாலும் அதைப் பாபமாக ஒருவரும் நினைக்கக் காணுேமே; ஆகவே; பிறர்க்குத் தீங்கு விளைப்பதான ஸத்ய வசனம் அஸத்ய வசனமே யாகுமென்று எப்படிச் சொல்லக் கூடும்? என்றிப்படிப்பட்ட வாதங்கள் தோன்றக் கூடியவையுண்டு.

இதற்குச் சமாதானம் கேண்மின். "ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யம் அப்ரியம்" என்கிற வசனம் நாம் கற்பித்ததன்று ; உலகம் போற்றும் மஹர்ஷி வசனம் இது. 'ஸத்யமாயிருந்தாலும் பிறர்க்குத் தீங்கு விளைக்குமதாயிருந்தால், அது சொல்லலாகாது' என்று சாஸ்த்ர ப்ரவர்த்தகர்களான முனிவர்களே யன்ருே நியமித்துள்ளார்கள். அதை அப்ரமாணமென்று சொல்லித் தள்ளுவதற்கில்லை. லோகாநுபவத்தையும் சாஸ்த்ரத்தையும் ஸமரஸப்படுத்துவதென்பது எளிதான காரியமன்று. எல்லா சாஸ்திரங்களுக்கும் எல்லாருமே அதிகாரிகளாக முடியாது. உத்தமாதிகாரிகள் மத்யமாதிகாரிகள் அதமாதிகாரிகள் என்னும் பாகுபாடு எங்குமுண்டு. ஸத்யம் சொல்லிப் பிறர்க்கு அனர்த்தம் விளைப்பவர்களை உத்தமாதிகாரிகள் என்று கொள்ள சாஸ்திரம் இடம் தாராது. இங்கு நாம் பலபல இதிகாஸங்களை யெடுத்துக்காட்ட வேண்டியதாகிறது; ஆனுலும் விரிவுக்கு அஞ்சி ஒரு இதிகாசம் மாத்திரமே ஈண்டெடுத்துக் காட்டலாகிறது :—

**வீதஹவ்யருடைய இதிகாசம் :**

மகாபாரதத்தில் அநுசாஸன பருவத்தில் எட்டாவது அத்யாயத்தில் வீதஹவ்யன் என்னும் க்ஷத்திரியனுடைய கதை ஒன்று சொல்லப்பட்டுள்ளது; இவ்வரசன் தன்னுடைய நூறு புதல்வர்களோடுகூடிப் பகைவருடன் போர்புரிகையில் அப்புதல்வர் நூற்றுவரும் மாண்டொழிய, அரசன் (வீதஹவ்யன்) அஞ்சி நடுங்கித் தன் நகரைத் துறந்தோடி ப்ருகுமகரிஷியின் ஆச்ரமத்திற் புகுந்து அம்முனிவரை அடைக்கலம் புகுந்து நிற்க, அம்முனிவர் இவ்வரசனுடைய தீனதசையைக் கண்டிரங்கி அபயமளித்து ஆஸனத்திலேஅமர்த்தியிருந்தார்; அவனைப் பின்தொடர்ந்தோடி வருகின்ற பகைவன் அவ்வாச்ரமத்திற்கு வந்து அம்

முனிவரின் சிஷ்யர்களை நோக்கி, 'இங்கு யார் யார் இருக்கிறார்கள்? நான் தெரிந்து கொள்ள வேணும்; ப்ருகு முனிவரையும் நான் காணவேணும்; இங்கு நான் வந்திருப்பதாக அவர்க்குச் சொல்லுங்கள்' என்று சொல்ல, உடனே முனிவர் உள்ளிருந்து வெளியே வந்து அவனை உபசரித்து, 'இங்கு உனக்கு ஆகவேண்டியதென்ன?' என்று கேட்க, 'முனிவரே! வீதஹவ்யன் இங்கு வந்து பதுங்கிக் கிடக்கிறான். அவனை வெளியே விடும். அவனைக் கொன்று முடிக்கவேணும்' என்று அப்பகையரசன்கூற, அதற்கு ப்ருகு முனிவர் விடை கூறுகின்றார்; "நேஹாஸ்தி க்ஷத்ரிய கச்சித் ஸர்வே ஹீமேத்விஜாதய" 'இவ்விடத்தில் க்ஷத்திரியன் ஒருவனுமில்லை; இங்குள்ளார் யாவரும் அந்தணர்களே' என்றார். அதனால் அந்த வீதஹவ்யனுக்கு நேர்ந்த ஆபத்து எளிதாக நீங்கிவிட்டது. க்ஷத்ரியனான வீதஹவ்யன் தம்முடைய ஆச்ரமத்தில் இருக்கச் செய்தேயும், 'இங்கு ஒரு க்ஷத்திரியனுமில்லை' என்று முனிவர் சொன்னதான துஅஸத்யமென்றுநினைக்கக் கூடியதே யொழிய ஸத்யமென்று நினைக்கக் கூடியதன்று. சரணாகத ரக்ஷணம் பரமதர்ம மென்றும், அஞ்சிநடுங்கிச்சரணம் புகுந்தவனைக் காட்டிக் கொடுப்பது மகா பாதகமென்றும் கருதியே முனிவர் அவ்விதமாக விடை கூறினார். 'வீதஹவ்யன் இங்கில்லை; என்று பச்சைப்பசும் பொய்யாகச் சொல்லாமல் "இங்குள்ளார் யாவரும் அந்தணர்களே; அரசன் ஒருவனுமில்லை" என்று சொன்னது முனிவருடைய சாதுரியம். பிறருடைய அனர்த்த பரிகாரத்திற்காகவும், பச்சைப் பசும் பொய் சொல்லலாகாது என்பது தெரிவிக்கப் பட்டதாகிறது. சரணாகத ஸம்ரக்ஷணமாகிற மிகச் சிறந்த தருமம் ஸித்திக்க வேண்டில் பச்சைப்பசும் பொய்யும் பேசலாம் என்று கூறுகின்ற பெரியார்களுமுளர்.

இவ்விஷயத்தை இப்போது இவ்வளவோடு நிறுத்திக் கொள்வோம். உண்மையுரையின் உண்மையை நம்போன்றவர்கள் எளிதாக நிஷ்கர்ஷித்தறிய முடியாது என்பதே முடிவான வார்த்தை. "தர்மஸ்ய தத்வம் நிஹிதம் குஹாயாம்" என்று மகாபாரதத்திலும். "ஸூக்ஷ்ம: பரமதுர்ஜ்ஞேயஸ் ஸதாம் தர்ம: ப்லவங்கம:" என்று ஸ்ரீராமயணத்திலும் கூறியுள்ளபடி தரும நுட்பங்கள் அல்பச்ருதர்களுக்கு அறிவரிதாதலால், இன்னது ஸத்யம் இன்னது அஸத்யம் என்று இலேசாகக் கண்டறிய முடியாதென்பதை யுணர்த்துதற்கே இங்கு இவ்வளவு விரித்துரைக்கப்பட்டது.

## பெருமாள் தம் வாக்கினால் வெளியிட்ட தமது ஸத்யவாதித்வம்:

இனி ஸ்ரீராமபிரானுடைய ஸத்யவாதித்வத்தைப் பற்றிப் பேசுவோம். ராமனுடைய ஸத்யவாதித்வம் ராமனுடைய திருவாக்கிலிருந்தே வெளிவருகின்றபடியை முந்துற நிரூபிப்போம். "ராமோத்விர் நாபிபாஷதே" என்று ப்ரஸித்தமாக வழங்கும் சுலோகம் ஸ்ரீராமனுடைய திருவாக்கிலிருந்தே அவதரித்ததாகும். வனவாஸப் புறப்பாட்டுக்கு முன்பு ராமன்கைகேயியிடத்தில் சொல்லுகிற வார்த்தை,

> "தத் ப்ருஹி வசநம் தேவி! ராஜ்ஞோ
> யதபிகாங்க்ஷிதம்
> கரிஷ்யே ப்ரதிஜாநேச ராமோ த்விர்
> நாபிபாஷதே"

என்பது பூர்ணச்லோகம். "ஆணையிட்டுச் சொல்லுகிறேன். ராமன் வாக்கில் இரண்டு பேச்சு வராது. ஒன்றே யுரைப்பானொருசொல்லே சொல்லுவானென்கிற புகழ் ராமனுக்கே உரியது" என்று இராமனே சொன்னானாயிற்று.

மற்றோரிடத்திலும் இராமன் தன்னைப் பற்றி இங்ஙனே சொல்லிக் கொள்வதைக் காணாநின்றோம்; (கிஷ்கி. 7—22). ஸுக்ரீவனை நோக்கிக் கூறுகின்ற வார்த்தை,

> "அந்ருதம் நோக்தபூர்வம் மே நச லக்ஷ்யே
> கதாசந,
> ஏதத் தே ப்ரதிஜாநாமி ஸத்யேநைவச தே சபே."

என்பது. 'இதுவரையில் நான் பொய் சொன்னதில்லை; இனிமேலும் ஒருகாலும் சொல்லப்போகிறதில்லை; ஸத்யத்தின் மேலாணையிட்டு உறுதியாகச் சொல்லுகிறேனிதை' என்பது இதன்பொருள். இதே வார்த்தையை அந்த ஸுக்ரீவனிடத்

திலேயே மறுபடியும் ஒருமுறை சொன்னது முண்டு (கிஷ்கி. 14-14 காண்க)

**தற்புகழ்ச்சி கூடுமென்பது பற்றி :**

இப்படி தன்னுடைய ஸத்யவாதித்வத்தைத் தானே சொல்லிக் கொள்வது தற்புகழ்ச்சி யென்னுங் குற்றத்தின் பாற்படாதோ? "பொய்யனேன் வந்து நின்றேன் பொய்யனேன் பொய்யனேனே" என்று ஆழ்வார்கள் அநுஸந்தித்துக் காட்டுகிற வழியன்றோ சிறந்தது; அவ்வழியை விட்டுத் தன்னைத்தானே மெய்யனாகப் புகழ்ந்து பேசிக் கொள்வது குணக்கடலான இராமனுக்குத் தகுதியோ? என்று சிலர் நினைக்கலாம். "தன்னுடையாற்ற லுணராரிடையினும் தன்னைப் புகழ்தலும் தகும்" என்றார் நன்னூ லாசிரியர். வடநூற்களிலும் இங்ஙனே அனுமதி யளித்ததுண்டு. தனக்குள்ள பெருமையைச் சொல்லித் தீர வேண்டிய ஸமயத்தில் சொல்லியே யாக வேண்டும்.

**ப்ரஸங்காத் தசரதனுடைய ஸத்யவாதித்வ விமர்சம் :**

இனி, ராமனுடைய ஸத்யவாதித்வம் பிறருடைய வாக்கினாலும் வெளிவந்தபடியையும், அந்த ஸத்யவாக்கின் பெருமையினாலாய பயனையும் எடுத்துரைக்க விரும்புகிறோம். அதற்குமுன். தசரதசக்ரவர்த்தியினது ஸத்யவாதித்வத்தைப் பற்றிச் சிறிது ஆராய்ச்சி செய்வோம். தசரதாத்மஜனான ஸ்ரீராமபிரான் ஸத்யவாக்கியனென்பது சொல்லவேணுமோ? தந்தையான தசரத சக்ரவர்த்தி ஸத்யவாதிகளில் தலைவனாக ப்ரஸித்தனாகையால் அவன் வயிற்றிற் பிறந்த இராமன் ஸத்யவாதியென்பதில் வியப்புண்டோ? என்று பலர் சொல்வதுண்டு. இதைப்பற்றி இங்குச் சில சொல்ல நினைக்கிறோம். தசரத சக்ரவர்த்திக்கு ஸத்யவாதி யென்கிற விருதும் பெருமையும் விளைந்தது "புண்யைர் யசோலப்யதே" என்று ஒரு மகாகவி சொன்ன கணக்கிலே ஏதோ அவனுடைய பாக்ய விசேஷத்தினாலத்தனை என்றே சொல்ல வேண்டும். தசரதனுடைய சரித்திரம் விபுலமாக நமக்கு ஒன்றும் கிடைக்க வில்லை. கிடைக்கின்ற சரித்திரத்தில் சாத்திரப்படி அவனை ஸத்யவாதி யென்று கொள்வதற்கு அவகாசமுண்டா வென்று பார்க்கவேணும். கைகேயிக்கு அவன் என்றைக்கோ வாக்களித்திருந்த இரண்டு வரங்களை ஸ்ரீராம மகுடாபிஷேக ஸமயத்தில் மறுக்க முடியாமல், ஸ்ரீராமனுடைய வனவாஸத்திற்கு இசைந்திருந்தானென்கிற இவ்வளவே கொண்டு, அவ்வரசனுக்கு ஸத்யவாதி யென்கிற புகழ் விளைந்துள்ளது. இதன் ஔசித்யத்தைச் சிறிது விமர்சிப்போம்.

கைகேயிக்கு அவன் வரங்கொடுத்திருந்தது எந்த யுகாந்திரத்திலோ தெரியாது. இன்னவிதமான வரம் என்று குறிப்பிடப் பட்டிருக்கவுமில்லை அதுகிடக்க, இவ்வரசன் இராமனைத் தானாக வரவழைத்து 'நாளை உனக்கு மகுடாபிஷேகம்' என்று சொன்னது நாடும் நகரமும் நன்கறிந்தது. அதுதானும் ஒருமுறை சொன்னதன்று, இருமுறை சொன்னது. இங்ஙனே சொன்னதைத் தவறினவன் ஸத்யவாதியாக எங்ஙனம் ஆகமுடியும்? கைகேயிக்கு வரங் கொடுத்திருந்ததற்குக்கண்ணழிவுசொல்லி விட முடியும்; எப்படியென்னில்;

சாஸ்த்ரங்களில் "பஞ்சாந்ருதாநி ஆஹுரபாதகாநி" என்று ஐந்து சமயங்களில்பொய்சொல்லலாமென்றும்,அதனால் பாதகமில்லை யென்றும் சொல்லப்பட்டுள்ளது. விவாஹகாலம் முதலிய ஐந்து சமயங்கள் எடுத்துக் காட்டப் பட்டிருக்கின்றன. அவற்றுள் "ப்ராணாத்யயே" என்பது மொன்று. உயிர்போகுந் தருணமாயிருந்தால் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பொய் சொல்ல நேர்ந்தால் அது பாதகமன்று—என்று ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டுள்ளது. தசரதன் கைகேயிக்கு இரண்டுவரம் கொடுத்தது சம்பராஸுர யுத்த ஸமயத்தில் உயிர்க்கு அபாயம் விளைவதாயிருந்த காலத்தில்தான் என்பது இதிகாஸத்தினால் தெரியவருகின்றது. அந்த வரப்ரதானத்தை அவசியம் நிறைவேற்றியேயாகவேணுமென்கிறநிர்ப்பந்தமில்லை.

ஏன் நிர்ப்பந்தமில்லை? 'உயிர்போகுந் தருணத்தில் பொய் சொன்னால் பாதகமில்லை' என்கிற சாஸ்த்ரம் ஸாமாந்ய

சாஸ்த்ரமே ஒழிய விசேஷ சாஸ்த்ரமன்றே; அதனைப் பின்பற்றியே யாகவேணுமென் கிற நிர்ப்பந்தமில்லை; ஆகவே கைகேயிக்கு அளித்திருந்த வரத்தின்படி தசரதன் நிறை வேற்றாதிருந்தனாயின் அது அவனுடைய ஸத்யவாதித்வப் பெருமைக்குப் பெருத்த குறையே யாகுமன்றோ? என்று சிலர் வாதிக்கவும் கூடும். இங்குத் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம் கேண்மின்.

இராமனுக்கு ராஜ்யங் கொடுப்பதாக ஒரு முறைக் கிருமுறை கூறினது மறைக்க முடியாததாதலால், இதைஅரசன்கைகேயி யிடம் எடுத்துக்கூறி, "கைகேயீ! உனக்கு நான் வெகுகாலத்திற்கு முன்பு பொதுவாக இரண்டு வரம் கொடுத்திருப்பது உண் மையே; இன்னது செய்யவேணுமென்று அப்போது நீ கேட்டிருக்க வில்லை; இப் போது நான் இராமனுக்கு ராஜ்யம் கொடுப் பதாகச் சொல்லியானபடியால் அந்த வாக் குத் தவற மாட்டேன்; அதற்கு விரோத மில்லாதபடி நீ கேட்கும் வரத்தையே நான் கொடுக்க முடியும்; முடிந்துபோன விஷ யத்தை நீ கேட்பது தகுதியன்று" என்று திண்ணமாகச் சொல்லியிருக்க வேண்டும். இப்படிச் சொல்லுவதனால் ஸத்யவாதித்வத் திற்கு யாதொரு பங்கமும் விளையாது.

அன்றியும் மற்றொரு விஷயமும் இங்குக் குறிக்கொள்ளத் தக்கதுண்டு: "ராமோ விக்ரஹவாந் தர்ம:" என்று வடிவெடுத்த ஸித்த தர்மமாகச் சொல்லப்பட்ட இராம னோடு கூடிவாழ்வதைவிட்டு ஆபாஸதர்ம மான ஸத்யவசனத்தைத் தசரதன் பற்றி நின்றது அவனுக்கு அவத்யமாகவும் சொல்லப்பட்டுள்ளது; முமுக்ஷுப்படியில் சரமச்லோக ப்ரகரணத்தில் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்றவிடத்தில் பிள்ளை லோ காசார்யர் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தி "சக்ரவர்த்தியைப் போலே இழக்கைக்கு உறுப்பு" என்பதாம். இங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:– "முன்பே வரப்ரதானத்தைப் பண்ணிவைத்து இப்போதாக மறுக்க வொண்ணாதென்று ஆபாஸமான ஸத்ய தர்மத்தைப் பற்றி நின்று "ராமோ விக்ரஹ வாந் தர்ம:" என்கிற பெருமாளோடே கூடி வாழவிருந்த பேற்றை இழந்த தசரத சக்கர வர்த்தியைப் போலே" என்று.

**ப்ரஸங்காத் ததிபாண்டனுடைய கதை:**

ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில் ததிபாண்ட னென்னும் இடையனுடைய கதை பிர ஸித்தமானது. தாயெடுத்த சிறு கோ லுக்கு உளைந்தோடிவந்த கண்ணபிரானை மறைத்திட்டு வைத்து, அவனைப் பிடித் தடிப்பதற்காகத் தொடர்ந்து வந்த யசோதை, 'என் மகன் இங்கு வந்ததுண் டோ?' என்று கேட்க, 'அவன் இங்கு வர வில்லை. அவனை நானறியேன்' என்று அஸத்யமே சொன்ன ததிபாண்டன் தனது தயிர்த் தாழிக்கு முட்பட மோக்ஷம் பெற்றுப் போனான்; ஸத்யவாதியென்று பேர்பெற்ற தசரத சக்ரவர்த்தி நரகபர்யாயமான ஸ்வர்க்கத்தையே பெற்று நின்றான். இத னால், தசரதனுடைய ஸத்யவாதித்வம் எம் பெருமானை இழப்பதற்கு உறுப்பான படி யாலே அஸத்யத்தின் பலனையே தந்து நின்றது என்று தெரிந்துகொண்டோம்.

(தொடரும்)



## கோயில்களிற் சிறப்பு நிகழ்ச்சிகள்

### திருகுடமுழுக்குப் பெருவிழாக்கள்

| | | |
|---|---|---|
| 1. | மாயூரம் திருஇந்தளூர் ஸ்ரீ பரிமள ரங்கநாதர் கோயில் | 5—2—68 |
| 2. | கும்பகோணம்: தாராசுரம் ஐராவதேசுவரர் கோயில் | 9—2—68 |
| 3. | காட்டுமன்னார்குடி: வீரநாராயணப்பெருமாள் கோயில் | 11—2—68 |
| 4. | குத்தாலம்: (திருத்துருத்தி) ஸ்ரீமன்மதேசுவர சுவாமி ஆலயம் | 4—2—68 |
| 5. | அவிநாசிவட்டம்: ஸ்ரீ மொக்கணீசுவரர் கோயில் | 9—2—68 |
| 6. | இராமநாதபுரம்: சுவாமிநாத சுவாமி கோயில் | 5—2—68 |
| 7. | சென்னை எழும்பூர்: ஸ்ரீநிவாசப் பெருமாள் கோயில் | 4—2—68 |

### பிரம்மோற்சவப் பெருவிழாக்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவட்டத்துறை: | தீர்த்தபுரீசுவரர் கோயில் | 5—2—68 முதல் 15—2—68 வரை |
| 2. | கோயம்புத்தூர்: | மருதமலை முருகன் கோயில் | 6—2—68 முதல் 14—2—68 வரை |
| 3. | திருக்கண்ணபுரம்: | ஸ்ரீசௌரிராஜப் பெருமாள் கோயில் | 5—2—68 முதல் 18—2—68 வரை |
| 4. | திருவொற்றியூர்: | தியாகராசர் கோயில் | 4—2—68 முதல் 15—2—68 வரை |



இராமேசுவரம் கோயிலின், எழில்மிக்க மூன்றும் பிராகாரக் காட்சி